# திருமலையாற்றுப்படை

எனும்

# திருவேங்கடமுடையானாற்றுப்படை

(திருமகள் துதியுடன்)



ஆக்கியோன் :-

'பிரகிருதி' சி. நா. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ.பி.டி




ஸ்ரீனிவாஸா பதிப்பகம்
7, இராமகிருஷ்ணபுரம் முதல் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை-600033.

## நன்றி

'திருமலை யாற்றுப்படை' எனும் 'திருவேங்கட முடையா னாற்றுப்படை' என்ற இந்நூலை பதிப்பிப்பதற்கு ஆசி கூறி ரூ. 540/- நிதி உதவி அளித்த திருமலை - திருப்பதி தேவஸ்தானத்திற்கும், அதற்கு ஏற்பாடு செய்த அதிகாரிகளுக்கும் மனமார்ந்த நன்றியை அறிவித்துக்கொள்கிறேன்.

சி. நா. கிருஷ்ணமூர்த்தி

## Acknowledgement

We hereby acknoweldge with thanks the Tirumala - Tirupathi Davasthanam and the connected officers for the grant of Rs. 540/- towards the Publication of this book in their ROC No. Edit. 4/ 845/ 81 d. 7-3-81.

C. N. Krishnamurthy.

# பதிப்புரை

தமிழில் ஆற்றுப்படை நூல்களில் தலைசிறந்தது, திருமுருகாற்றுப்படை. திருமால்மருகனுக்கு திருமுருகாற்றுப்படை போல் திருமலை திருவேங்கடநாதனுக்கு இத் 'திருமலையாற்றுப்படை' எனும் 'திருவேங்கடமுடையான் ஆற்றுப்படை' தோன்றியது.

தாயாரின்றிப் பெருமாளா? கூடாது. எனவே 'திருமகள் துதி' எழுத ஸ்ரீ வேதாந்த தேசிகரின் 'ஸ்ரீ ஸ்துதி'யும், ஆதி சங்கரரின் 'கனகதாரா ஸ்தோத்திர-மும் கைகொடுத்துதவின.

மேலும் அரும்பதவுரையும், வரலாற்றுச் செய்திகளும் இத்துடன் இணைக்கப்பட்டன.

திருவேங்கடனருளாலேயே இவ்வனைத்தும் நிகழ்ந்தன எனவே அத்திருவேங்கடமுடையான் திருவடிகளுக்கே இந் நூலை அணியாக்கினேன்

ஆக்கியோன்.

# நன்றி

1 இந்நூல் வெளிவர ஊக்கமும், ஆக்கமும் அளித்து உதவிய திருமலை-திருப்பதி தேவஸ்தானத்து அதிகாரிகளுக்கும்,

2 இந்நூலுக்கு ஓர் அணியென வாழ்த்துரை வழங்கி அருளிய வாகீஸ கலாநிதி, பெருந்தமிழ், சமயத் தொண்டராகிய கலைமகள் ஆசிரியர் திரு.கி.வா. ஜகந்நாதன் அவர்களுக்கும்,

3 இது நல்லமுறையில் வெளிவர எல்லா உதவியும் அளித்த அருமை நண்பர் 'பாலாஜி பப்ளிகேஷன்ஸ்' உரிமையாளர் திரு. ஜானகிராமன் அவர்களுக்கும்

4 நல்லமுறையில் அச்சுப்பிழைகள் பார்த்துதவிய நண்பர் ஸ்ரீ ராமகிருஷ்ண உயர்நிலைப்பள்ளி தமிழ்ப் பண்டிதர் திரு. டி. கேசவன் அவர்களுக்கும்,

5 உரிய காலத்தில் நல்லமுறையில் அச்சிட்டு நூலை உருவாக்கிய ஸ்ரீ கிருஷ்ணசித்திரா பிரிண்டர்ஸ் உரிமையாளர் அவர்களுக்கும்,

6 மற்றும் உறுதுணையாயிருந்த கலைமகள் உதவி ஆசிரியர் திரு .எஸ். வி. ரமணி அவர்களுக்கும்

என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## திவ்விய தேசங்கள்

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்திருக்கும் தேசங்கள் 108 என்பர். அவை சோழ நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், மலை நாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், வட நாட்டுத் திருப்பதிகள் எனப் பல வகையாம்.

ஈர் எழுபதாம் சோழம்,
ஈர் ஒன்பதாம் பாண்டி
ஓர் பதின்மூன்றும் மலை நாடு
ஆறேடு ஈர் எட்டு தொண்டை,
அவ் வடநாடு ஆறு - இரண்டு

கூறு திருநாடு ஒன்றுக்கொள்" என்னும் பாடலைக் காண்க. இவற்றுள் வடநாட்டுத் தலங்கள் ஆறு, இரண்டு (6×2) பன்னிரண்டாகும். (1) திருவேங்கடம் (திருமலை - திருப்பதி) (2) சிங்கவேள் குன்றம் (அஹோபிலம்) (3) அயோத்தி (சாயு நதிதீரம்) (4) நைமிசாரண்யம (லக்னௌ) (5) சாளக்கிராமம் (நேபாள நாடு) (6) பதரியாச்ரமம் (பத்திரிநாத்) (7) கண்டம் கடிநகர் (ஹரித்வார் அருகே) (8) திருப்பிரிதி (கோழிமடம்) (9) துவாரகை (பம்பாய் அருகில்) (10) வடமதுரை (டில்லி அருகில்) (11) திரு ஆய்ப்பாடி (யமுனை நதிதீரம்) (2) திருப் பாற்கடல் (ஞானதரிசனம்) என்று பெரியோர்கள் கூறுவர், வடநாட்டுத் தலங்கள் 12 இனும் முதல் இடம் பெற்றது திருவேங்கடமாம்.

திருவேங்கடம் பற்றிய குறிப்புகள்

---

தொல்காப்பியத்துக்குப் பாயிரம் பாடிய பரம்பாரனர் திருவேங்கடம் பற்றி குறிப்பிடுகிறுர்

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்தமிழ்கூறு
நல்லுலகத்து" என்பது தொல்காப்பியர் பாயிரம்

மற்றும் சிலப்பதிகாரத்தில், வேனிற்காதையில்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"

என்று திருவேங்கடம் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

"வெங்கடம் குமரித் தீம்பிணம் பௌவமென்று

இந்நான் கெல்லை தமிழது வழக்கே" எனச் சிகண்டியார் குறிப்பிட்டுள்ளார்

"வடக்கும், தெற்கும், குணக்கும், குடக்கும்
வேங்கடம், குமரித் தீப்புனல் பௌவம்" என்றும்

அந்நாள் கெல்லை அகவயில் கிடந்த நாலது முறை" என்றும் கூறியுள்ளார் காக்கைப் பாடினியார். நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவரும்,

"குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனு நான் கெல்லை" என்று குறிப்பிட்டுள்ளார்

மகாகவி பாரதியாரும்,

"நீலத் திரைக்கட லோரத்திலே நின்று
நித்தம் தவம்செய் குமரி எல்லை - வட
மாலவன் குன்றம் இவற்றிடையே - புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு" என்கிறார்

மற்றும் இராமானுஜ நூற்றந்தாதியில்,

"இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை
யென்றும்,

பொருப்பிடப் பாயனுக் கென்போர் நல்லோர்" என்பதில் எம்பெருமான் இருப்பிடம வைகுந்தத்திற்குப் பிறகு வேங்கடமே கூறப்பட்டுள்ளதைக் காண்க.

மற்றும் ஸ்ரீ மங்கிகமாந்த மகாதேசிகன் அருளிய அதிகார சங்கிரகத்தில் 43 வது பாடலில் திருவேங்கடத்தின் சிறப்பு கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

கண்ணனடியினை யொக்குக் காட்டும் வெற்பு,
கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்பு,
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு,
தெளிந்த பெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு,
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்பு
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு,
விண்ணவரும் மண்ணவரும விரும்பும் வெற்பு,
வேங்கட வெற்பென விளங்கும் வேதவெற்பே,

இப்பாடல் திருமலை எனப்படும் திருவேங்கடமலையின் உயர் சிறப்பினை இவ்வாறு விளக்கிக் காட்டுகிறது.

திருமாலின் திருவடிகளைக் காட்டுவதும், வினைகள் தீர்ப்பதும், வீடாகத்திகழ்வதும், தீர்த்தங்கள் செறிந்ததும் புண்ணியத்தின் புகலிடமும், போகங்கள் அளிப்பதும், விண்ணவரும், மண்ணவரும் விரும்புவதும் வேங்கடம் என்னும் வேதமலையேயாகும்.

# நூற்சிறப்புப் பாயிரம்

மலர்தலை யுலகில் மாலடி பற்றினர்
அலகிலாப் பெரியார் கூறிடும் பொருளினை
நிலையா யேற்று நீலவண் ணனையே
நிலையாய் நினைத்து நீடு வாழ்வார்
அடியேன் பிரகிருதி, திருமா லடிகளை
மடிமேல் தாங்கி, முனிவனை நினைந்து,
படியுடை' திருமலை வரலா றறிந்து
அடியினைக் காட்டும் அழகிய நூலினை
முக்கடல் சூழ்ந்திடும் முத்தமிழ் நாட்டில்
இக்கணம் யாவரும் எம்பிரா னருள்பெற
தக்கணந் தன்னில் தமிழில் அழகிய
செக்கர் உமிழும் செங்கதி ரனைய
திருமலை ஆற்றுப் படையெனு மழகிய
திருவேங் கடத்தா றுற்றுப் படையினை
தொகுத்து யாத்தேன் தொண்டர் உய்ந்திட
வகுத்த நூலினை வாய்விட் டோதினர்
நிதியெலாம் பெற்றிட நிர்மல னருள்வான்
பதிதனில் பல்லாண் டருளொடு வாழ்வார்
விதியொடு விஷ்ணு மலரடி பெற்றோர்
விதியொடு பரமபதப் பேறும் பெறுவார்.

முனிவனை — இராமானுசனை
தொண்டர் — ஆக்கியோன், அடியார்
நிர்மலன் — திருமால்
விதியொடு — முறையோடு

## 'கலைமகள்' திங்கள் இதழ் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்களின் வாழ்த்துரை

(நகல்)

திருமகள் துதியாம் வடமொழி நூலைச்
செய்யுளால் மொழிபெயர்த் தமைத்தான்;

மருவிய திருவேங் கடமுடை யான்பால்
மகிழ்வொடும் செல்வதற் குரிய

பெருமைசால் ஆற்றுப் படையினை அளித்தான்;
பிறங்கிய பத்தியின் மேன்மை

வருமுளத் தானும் கிருட்டின மூர்த்தி;
வாழிய வாழி வாழி;

பத்தியி னாலே இறைவனைப் பணியும்
பாங்குடை யோர்உணர் வோங்க

நத்தியே பாடும் பாடல்கள் தம்மில்
நாடுமிப் பாடலும் அடங்கும்;

மெத்திய அன்பும், பண்பும்நன் குடைய
மேன்மையான் கிருட்டின மூர்த்தி

எத்திறப் பாவும் இயற்றிடும் வன்மை
இலங்கவே நீடூழி வாழி.

(ஒப்பம்) கி. வா. ஜகந்நாதன்.

# திருமலை - திருப்பதி

இத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் சீனிவாசப் பெருமாள் இங்கு ஐந்து நிலைகளில் எழுந்தருளியுள்ளார். அவை யாவன.

(1) மூலவர் — இவரே மலைக்கினிய நின்ற பெருமாள் (இப்பெருமானைத் தரிசிப்பதற்கே கோடானு கோடி மக்கள் அனுதினமும் யாத்திரை வந்து கொண்டே இருக்கின்றனர்)

2) போகர் — அழகிய பிரான் — இவரை மூலவரின் திருவடிகளின் அருகில் காணலாம். எல்லா விதமான மதச் சடங்குகளையும் பெறுபவர் இவரே. அதிகாலையில் திருமஞ்சனம் முதல் இரவு துயிலும் வரை எல்லா நிகழ்ச்சிகளும் இவருக்கே.

(3) உற்சவர் — திருமலையப்பன். திருவிழாக் கோலங்கள் கொண்டு வீதிவலம் வருபவர் இவரே. மற்றும் சுவாமி புஷ்கரணியில் தெப்போற்சவத்தில் பங்கு பெறுவதும் இவரே.

(4) கொலுவில் அமர்வார் — திருவேங்கடத்து உறை செல்வன். அன்றுட கோயில் நிருவாகம் பார்ப்பவர் இவரே. இவர்முன் கணக்குகள் அன்றூடம் சமர்ப்பிக்கப்படும்.

(5) உக்கிரவர் — திருவேங்கடம் மேயவன். இந்த உக்கிர சீனிவாசர் ஆண்டுக் கொருமுறை கௌசிக ஏகாதசி அன்று மட்டும் திருப்தி வந்து சூரியோதயத்திற்குள் இருப்பிடம் சேர்வார். மற்ற நாட்களில் வெளிப் போந்தால் பதி எரிக்கப்பட்டு விடும் என்ற கொள்கை நிலவுகிறது.

"இத்தகைய திருமலைக்குச் செல்ல நினைத்து அடியெடுத்து வைப்பார்க்கும், அசுவமேத யாகபலன் கிட்டும்; வேங்கட வைபவம் கேட்பார் செல்வம் எல்லாம் பெறுவர்; வேங்கட மான்மியத்தை வாங்கியவரேனும், எழுதியவரேனும், பூசித்தவரேனும் வித்தையும், ஞானமும், சம்பத்தும் பெற்றுப் பின் பரமபத மடைவர" என்பது பிரம்மாண்டப் புராணம் பொருளாகும்.

ஸ்ரீ ராமஜெயம்

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம;

# திருமலை யாற்றுப் படை

எனும்

## திருவேங்கட முடையானாற்றுப் படை



:-காப்புச் செய்யுள்கள்:-

அன்பருள மாறுதல் கொள்ளத் திருமலையில்
இன்பமாய் நின்றிட்ட கோவிந்தன் — மென்பதத்தில்
நம்பிக்கை கொண்டுநான் யாத்திடுமிந் நூலுக்குத்
தும்பிக்கை ஆழ்வார் துணை (1

இறைபுக ழென்று மினிமையாய்ப் பாடும்
மறைதனைத் தீந்தமிழில் தந்தார் — மறையவர்
நாடிடும் சீனிவாசன் பொன்னடி பற்றினேன்
நாடியே ஆழ்வா ரருள்வார் (2

தித்திக்கும் தீந்தமி ழில்திரு வாய்மொழி
எத்திக்கும் நல்மணம வீசிட — பத்திக்கும்
முத்திக்கும் பாடிய மாறனென் னற்புதநூல்
சித்திக்கக் காத்தருள் வான் (3

# திருமலை யாற்றுப்படை (எனும்)
# திருவேங்கட முடையா னாற்றுப்படை

ஆக்கியோன்; 'பிரகிருதி' சி.நா. கிருஷ்ணமூர்த்தி

-: நூல் :-

முன்னுரை

உலகம் மகிழ்ந்திட உள்ளம் நிறைந்திட
அலகிலா அடியார் தேடிடும் திருமால்
உறைவிடம் பலவற்றுள் ஒப்பிலா தோன்றும்
மறைகளும் பரவிடும் மாமலை திருமலை,

பெருமை

மண்ணில் மலைகள் பலவுண் டெனினும்
எண்ணிலாப் பெருமை மிக்கது திருமலை,
கண்ணில் சிறந்த பாவை யெனவே,
பண்ணில் சிறந்த பைந்தமிழ் எனவே,
தேனினு மினிய தெலுங்கு மொழியென,
10 கத்தூரி பரிமள கன்னட மொழியென,
பொன்னும் மணியும் பொலிந்து விளங்கும்
மின்னும் மணி முடி யனையது புவிக்கு;
திருமலை, திருப்பதி, திருவேங் கடமெனும்

பல பெயர்கள்

ஒருமலை பெற்றதே பலபெய ராகும்;
கருடன் கொணர கருடா சலமாம்,
விருஷ பாசுரனால் விருஷ பாத்திரியாம்,
சிந்தனை தீர்ப்பதால் சிந்தா மணியாம்,
வந்தனைக் குரிய ராமனால் ராமகிரி,
கனகம் நிறைந்த கனக கிரியாம்,
20 காத்திடு மடியார் கர்ப்ப கிரியாம்,
நரசிம்மன் தன்னால் நரசிம்ம கிரியாம்,
நாரணன் தவஞ்செய் நாரா யணகிரி,

மோகம் பயின்றிடும் முனிவர் தவஞ்செய்
ஞானம் பெற்றிடு மடியார் ஞானகிரி,
ஆலமுண்ட ஈசன் அருள்பெறும் மாமலை,
நீலன் சேர்ந்து வாழ்ந்த நீலகிரி,
சீமகள் தேடிய சீனிவா சன்மலை,
நாமகள் நாதனுக் கருளிய நன்மலை,

அஞ்சனை தன்னால் அஞ்சனத் திரியாம்
30 விஞ்சிடும் சேடனால் சேஷாத் திரியாம்
வேங்கடம் தீர்ப்பதால் வேங்கட கிரியாம்
வேங்கடத் தானுறை வேங்கட கிரியாம்
வைகுண்ட மளித்த வைகுண்ட கிரியாம்
இடபா சுரனால் இடபா சலமாம்

தேவர்கள் நாடுதல்

தேவர்க ளனைவரும் தேடியே வந்திடும்
தேவர்கள் தலைவன் நாடிடும் திருமலை;
பாற்கடல் பள்ளி கொண்டான் நின்றுன்
நாற்புறம் மறைகள் ஓதியே நின்றிட;
அட்டதிக் கஜங்கள் அனுதினந் துதிசெய்
40 திட்ட தெய்வந் தனையே ஏத்திடும்;
சூரியன், சந்திரன், அங்காரகன், புதன்,
குரு, சுக் கிரன், சனி, இராகு, கேது,
என்றிடும் நவக்கிர கங்கள் துதிசெய்
பொன்றச் சகட முதைத்தான் திருமலை,

தீர்த்தங்கள்

ஆர்த்தெழும் புள்ளினம், அரி, கரி மானினம்
தீர்த்தம் பருகிடத் திரியும் தீர்த்தகிரி,
தீர்த்தங் களாடி திருவடி தொழுதிட
தீர்த்தங் கள்பல கொண்ட தீர்த்தகிரி,
அத்தி தீர்த்தம், ஜாபாலீ தீர்த்தம்,
50 நித்தியம் பூக்கும் கமலத் தீர்த்தம்,
நாரத தீர்த்தம், நலமிகு தீர்த்தம்,

பாரினில் வெல்ல பாண்டவ தீர்த்தம்,
குமரனுக் கருளிய குமார தீர்த்தம்,
குன்றின் வீழ்நீர் கோகர்ப்ப தீர்த்தம்,
சனகாதி முனிவர் சங்கடந் தீர்த்த
சனகச நந்தன சிறப்புத் தீர்த்தம்,
நாடுவோர் வீடுபெற உதவும் தீர்த்தம்,
பீடுடை இராம கிருஷ்ணர் தீர்த்தம்;
தும்புரு தீர்த்தம் துயராறு தீர்த்தம்,

60 கிருஷ்ண தீர்த்தம் சுகமது அளிக்கும்,
கபில தீர்த்தம், காரண தீர்த்தம்,
கணேச தீர்த்தம், காசிப தீர்த்தம்,
சர்வ தீர்த்தம், சதுர்முக தீர்த்தம்,
சதானந்த தீர்த்தம், சானவீ தீர்த்தம்,
சிருங்க தீர்த்தம், சுகரது தீர்த்தம்,
சுரகர, சுதிஷ்ண, சுத்த தீர்த்தம்,
சுப்பிர மணிய சேஷ தீர்த்தம்,
நரசிம்ம, நாராயண, நிர்மல தீர்த்தம்,
பராசர, பரத்வாஜ, பஞ்சாயு தமொடு

70 பார்க்கவ, பிரகஸ் பதி,பிதிர் தீர்த்தம்,
புராண தீர்த்தம், புண்ணிய தீர்த்தம்,
மந்தர தீர்த்தம், மருத்துவ தீர்த்தம்
மாருத மார்க்கண் ட,மேக தீர்த்தம்,
வச்சிர, வயின தேய, வாருண,
வாசுகி, வாசு தேவ, வேணு
வில்வ, விஷாகர விஷ்ணு தீர்த்தம்,
விசுவ சேன, விசுவா மித்திர,
வைரவ தீர்த்த மெனப்பல தீர்த்தம்,

சுனைகள் சுனைகள் பலவுண்டு சுமையை நீக்கிட,
80 மனைவி மக்களொடு மூழ்கி எழுந்திட,
பாப விநாசம் பாவம் தொலைக்கும்,
தாபம் தணிக்கும் ஆகாச கங்கை,

புஷ்கரணி பஜனை செய்வார் பக்தியொடு மூழ்கும்
கஜராஜன் கண்ட கஜேந்திர புஷ்கரணி.
விமல னருள்பெற விராஜ நதியது.
அமலன் அருகில் அற்புத புஷ்கரணி.
தன்னில் பங்கேற் றூர்பல தேவர்கள்,
பாவன குபேரர், காலவர், அக்கினி,
மார்க்கண் டேயர், வசிட்டர். இயமன்,
90 வாயு, வருணன், சரசுவதி என்பார்;
புஷ்கரம் நிறைந்த புஷ்கர கிரியது'
புஷ்பம் நிறைந்த புஷ்ப கிரியது.

இயற்கை வள்ளி எடுப்பார், கல்வி எடுப்பார்,
கிள்ளி எடுப்பார், காய்,கனி, மலர்கள்,
வள்ளி புணரும் ஆறுமுகந் தன்னில்
வள்ளி புணர்ந்தான் மாமன் வேங்கடம்;
வண்டுகள் பாடிடும் வேங்கட மாமலை,
விண்ணவர் போற்றிடும் விண்தோய் வெண்மலை,
தெள்ளியச் சுனைநீர் சொரிந்திடும் தண்மலை,
100 கள்ளவிழ் செண்பகம் நிறைந்த செம்மலை,

பெருமை பொன்மலை போற்றித் துதிசெய் புகழ்மலை
வெள்ளி மலையும் வணங்கிடும் வல்மலை,
ஏங்கிடு மடியார் இளைத்த உயிரின்
வேங்கடம் தீர்க்கும் வேங்கட கிரியாம்;
கதிரவ னனுதினம் கிரணக் கரங்களால்
சதராடி மகிழ்ந்து தொழுதிடும் கிரியது,
மதியது தண்ணொளி காட்டி நிதமும்
பதிதனை நாடுவார் தமக்கே உதவும்,
இருளினை நீக்கும் தினகரன், திங்கள்,
110 இருவினை நீக்கும் சீனிவா சனருள்,
இருளினைப் போக்கிட இவ்வுல கிறுள்ளசர்
அருள்பெற நாடுவார் ஆதிமூலன் மலையினை;

இயற்கை கானவர் களிப்பர், கனிதனைப் பறிப்பர்;
மானினப் பெண்கள் தமக்கே யளிப்பர்;
மீனெனும் கண்ணுடை மங்கை யரெலாம்,
தேனுடை மலர்கள் பறித்து முடிப்பர்;
குறவர் பலரும் குறம்பாடித் திரிவர்;
குறத்திய ராங்கே நரிப்பல் லெடுப்பர்;
மறவர் கரடி, வெம்புலி பிடிப்பர்;
120 சிறப்புடை கிம்புரி தந்தம் எடுப்பர்;

சந்தனக் காற்று சிந்துகள் பாடிடும்;
இந்தனம் தந்திடும் வேங்கை யாடிடும்;
மலைமேல் மாதர் தேன்,தினை தருவர்:
மலையாடு கூவிடும் குரலது கேட்டும்;
தேனினை யுண்டு வண்டுகள் மயங்கும்;
தேனினை உண்டு கத்தும் கடுவன்;
தேனெனும் மந்தியைத் துரத்திப் பிடித்து
ஏனெனக் கேட்கும், இடம்,வலம் ஓடும்;
களிறுகள் பிடியொடு கானில் திரியும்,
130 காளையர் சிலரும் களிற்றைத் துரத்துவர்;

ஊடிய பிடியது இடியொலி கேட்டு
நாடிடும் களிற்றைக் கூடவே எண்ணி,
குரங்குகள் மூங்கில் மரத்தினி லேறிட
சிரஞ்சாய்த் திடும்வேய் முத்தினை உதிர்க்கும்;
முகில்கள் முத்துநீர் சிந்தியே விற்கும்,
அகில்புகை ஆங்கே நறுமணம் அளிக்கும்,
விண்ணொலி கேட்டு விடமுடை நாகம்,
பண்ணொலி வெறுத்து பயந்தே ஒளியும்;
மந்திரம் பித்தும் பிணியும் போக்கும் மந்திரம்,
140 சித்தர் சபித்திடும் சீனிவாச மந்திரம்,

கூனும், குருடும், செவிடும், மலடும்,
ஊனின் தொல்லை போக்கிடும் மந்திரம்,

கோவிந்தா என்னும் கோவலர் மந்திரம்,
பாவங்கள் தீர்த்திடும் பாலாஜி மந்திரம்,

பக்தர் குழாம்

தென்றல் வீசிட தெண்ணீர் சொரிந்திட
மன்றந் தன்னில் மணவினை நிகழ்ந்திட
நின்றான் கோலம் நேரினில் கண்டிட
என்றும் வருவர் எண்ணிலா பக்தர்,
'ஏழுமலை ஆண்டவா' என்றே கூவுவர்,
150 ஏழுபிற வித்துயர் ஒழிக்க வேண்டுவர்;

இன்பம்

அவன்திரு நாமம் செவிக்க தின்பம்,
அவன் திருப் பூசனை கரங்களுக் இன்பம்
அவன் திருக் குறிப்பே நமக்குப் பரகதி
அவன் திரு வருளே நித்திய சுகமாம்;
திருக்கோல தரிசனம் பரமபத மளிக்கும்,
திருக் கோயில் வலமது பரம பாவனம்;
உலகம் படைக்க அவன் திரு நாபி
உலகம் ஆக்கும் பிரமனை அளித்தது,
உலகம் கவர்ந்த விருஷ பாசுரனை
160 நிலமிசை அழித்தது நிர்மல வராகம்;

தல வரலாறு

மலைகளில் சிறந்த மங்கலத் திருமலை,
அலைகடல் கொண்டான் அமர்ந்த பெருமலை;
சர்வ தீர்த்த வடிவில் சரசுவதி,
சர்வ பாவம் தொலைக்கும் நன்மலை;
பக்தர்க் கருளவே பார்மிசை தங்கி
முக்தி யருளிக் காப்பது வராகம்,
விசுவ கர்மா சமைத்த நற்பதி
விசுவந் தன்னில் உயர்ந்த திருப்பதி,
பிருகு முனிவர் கண்ட சத்துவன்

170 உருகி நின்றோர்க் கருளும் வித்தகன்,

பாற்கடல் நீத்து வந்த பெருமாள்
பாலது பெற்றிட பிரமன், பசுபதி,
பசுவுங் கன்றுமாய் பார்தனில் வந்தார்.
பாலது அளித்துப் பேறுகள் பெற்றார்;
பதுமா வதியெனும் பவித்திர நங்கையை
பதுமா நாபனும் கண்டு மோகித்து
வகுள மாளிகை யைத்தூ தனுப்பி
வகுளா பரணன் தேவியை மணந்தான்;
கலியாணச் செலவுக் காககுபே ரனிடம்
180 கலியாணக் கடனது பெற்றார் பெருமாள்;

உண்டி

கடனுக் குவட்டி கட்ட வேண்டிய
கடவுளுக் குதவ காசினி பக்தர்
வட்டி காசுவெங் கடாசல பதியெனும்
இட்ட தெய்வந் தனக்குக் காணிக்கை
தினமும் அளிப்பர் திருப்தி யுடனே,
தினமும் அடியார் மகிழ்ச்சி யுடனே'
உடுக்கை போன்ற உயர்ந்த உண்டியில்
இடுக்கண் களையும் இறைவன் தனக்கு,
பொன்னும், வெள்ளியும், முத்தும், பவழமும்,
190 மின்னும் பட்டும், முடியும், மணியும்,

கற்றை கற்றையாய் ரூபாய் நோட்டும்
மற்றை நாணய வகைகள் பலவும்,
எற்றுக் கிவையே எம்பிரான் இருக்க,
என்றே யிடுவர், என்றும் இடுவர்;

தல வரலாறு

திருமகள் நாதன் திருமகள் பெறவே
திருவுடை தேவர் அனைவரும் கூடினர்;
அருளொ டரியும், பிருகு வேண்டிட
அருளுடை அலர் மேல் மங்கையைமணந்தார்;

திருப்பள்ளி வைகறை நீராடி வைணவப் பெரியார்,
யெழுச்சி மெய்கறை ஒழித்திட மையல் கொண்டு,
200 மைவண் ணனடி காண விழைவார்,

மைவண் ணனருள் பெறவே விரைவார்;
விழிமலர் திறந்து வேதனை நீக்கிட,
பழியது நீக்கிப் பாவம் போக்கிட,
இழியது பட்டர் பிரானுக் கருளிய,
விழியோன் வேங்கட முடையான் தன்னை,
திருப்பள்ளி யெழுப்ப சுப்ர பாதமெனும்
திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்கள் பாடுவர்;
கோவிந்தா துயிலெழு, கோவிந்தா துயிலெழு,
210 கோவிந்தா அடியவர் துயரினைத் துடைத்திடு,

உலக நாயகி இலக்குமி தேவியே
உலகைக் காக்கத் துயிலெழு என்பர்;
தசா வேதங்கள் காத்த விந்தை மீனே,
வதாரம் மாதவர் காத்த மலையடி கூர்மமே,
பூமியை மீட்ட புனித வராகமே,
பூமியைக் காத்த புனித நரசிங்கா,
அரசன் மாவலி அடக்கிய வாமனா,
பரசொடு மன்னரை எதிர்த்த ராமனே,
அரசொடு அறவழி காட்டிய ராமனே,
220 சரசம் காட்டிய சாகசக் கண்ணனே,

கண்ணனில் மூத்த கலப்பை ராமனே,
மண்ணினில் துயரத்தைத் துடைக்கும் கல்கியே,
என்று அவனது அவதாரப் புகழினை
என்றும் புகழ்ந்து துதிசெய்து நிற்பர்;
தரிசனம் விசுவம் விழுங்கிய விமலன் காட்டும்
விசுவ ரூபதரி சனமது காண்பர்,

தோமாலை சேவை கண்டு களிப்பர்,
பாமாலை பாடிப் பகவானைத் துதிப்பர்,
ஏகாந்த சேவை காணவே விழைவர்,
230 ஏகாந்த நாதனைத் தனியே காண்பர்;

திருமேனி அழகினைக் கண்ட அடியார்,
திருமால் அழகில் மயங்கி நின்றார்;

கேசாதி பாதம்

கற்பூரம், சந்தனம், கத்தூரி, பரிமளம்,
அற்புதப் புனுகு, மணமுடைத் திருமேனி,
முடி முத லடிவரை சிறப்பினை உணர்ந்தார்,
முடியினில் மணிமயக் கிரீடம் கண்டார்;
கிரீடத் துள்ளொளி கரிய குழலது,
நறுமணம் நாற்புறம் வீசிடும் குஞ்சியே,
நெற்றியில் வெள்ளைத் திருமண் காப்பு,
240 உற்றதோர் சூரணம் நடுவில் சிவப்பு;

அன்றலர் தாமரை யொத்த வதனம்,
என்றும் கருணை பொழியும் முகமலர்;
வில்லினை யொத்த வியனுடைப் புருவம்,
மெல்லவே அடியாரை ஈர்க்கும் புருவம்,
நல்லதோர் நறுமணம் முகரும் நாசி,
துல்லிய அழகினைக் காட்டும் மூக்கு;
மலையெனப் பொருது நிற்தும் குழைகள்,
விலையிலா ரவி, மதி யெனவுடை காதுகள்;
பாலினில் விழுந்த வண்டுக ளனைய
250 மாலுடை மங்களத் தாமரைக் கண்கள்;

கருவுடை மேகங்க ளொக்கும் கண்களில்
கருணை பொழியும் கரிய விழிகள்;
வெண்ணெய் விழுங்கிய விமலன் வாயது,
மண்ணை உண்ட மாயவன் வாயது,
பாலினும் வெண்மை முத்துப் பற்கள்;

பாற்கடல் முத்துக் களனைய பற்கள்;
ஊறிடும் சுவைதரு முன்னத உதடுகள்,
பாரினை மயக்கும் கொவ்வை இதழ்கள்;
திருத்துழாய் மாலையும், கௌத்துப மணியும்
260 பருத்தநல் மலர்மாலை, அணிந்த கழுத்து;

கண்டார் கண்கள் அசையாத் தோள்கள்;
வண்டார் மலர்மகள் அணைந்த தோள்கள்;
சங்கு சக்கர மேந்திய கரங்கள்,
பங்கய மனைய அபயக் கரங்கள்;
அன்றி ரணியன் உடலினைக் கிழித்த;
என்றும் ஒளியடை இணையிலாக் கூருகிர்,
திருப்பொன் னுடைதனைத் திருவொடு தரித்த,
திருமகள் உறையும் திவ்விய மார்பு;
ஆலிலை துயின்று அகிலம் படைக்க,
270 பாலகன் பிரமனைப் படைத்த உந்தி;

மட்டிலா அழகொடு மக்கள் மயங்கிட,
பட்டாடை மூடிய பருத்த தொடைகள்;
மருண்ட அடியார் மருட்சி நீக்கும்,
உருண்ட பந்தென ஒளிரும் முழங்கால்;
மழலைச் செல்வனுய் சலங்கை அணிந்தும்,
கழலினைத் தரித்தும் கறுத்த கணுக்கால்;
விண்ணும் மண்ணும் அளந்த சேவடி,
மண்மகள் நித்தம் வருடும் சேவடி;
பெரிய திருவடி, சிறிய திருவடி;
280 பற்றி நின்றிடும் கமலத் திருவடி;

சேவை மாணிக்கச் சேவை, மணிமுடிச் சேவை,
ஆணிப் பொன்நகை அழகிய சேவை;

வார விழாக்கள்

ஞாயிறு தன்னில் நல்லவர் கூட்டம்,
பாயிரம் பாடும் பாவலர் கூட்டம;
திங்கள் தோறும் திருமால் அடியார்,
மங்கள தரிசனம் காணவே வருவார்;
செவ்வாய் தோறும் தெப்போற் சவமே,
செவ்வாய் கமலச் செங்கண் கோலமே;
புதனன் றோரா யிரக்கல சங்கள்.
290 புனித பரிமள தீர்த்தம் நிறைத்து,

போக சினிவாச மூர்த்தி, மற்றும்
ஆகமுடை தேவியர் மலையப்பர் தமக்கும்,
கலசா பிஷேகம் கச்சித மாகவே,
மலைமீது நடக்கும் மங்கள கரமாய்,
குருவின் நாளில் திருப்பாவா டாசேவை,
அருளினைப் பெறவே நடக்கும் தருணம்,
பலவகைப் பிரசாதம், பாயசம், லட்டு,
புளியோரை, ஜிலேபி, தேன்குழல், அப்பம்,
தங்க வாயிலில் குவித்து வைப்பர்,
300 தேங்காய், மலர், தீபம் குங்குமம், சந்தனம்,

மந்திரங் களுடன் மாயவன், மாதவன்,
சுந்தரங் காணவே சமர்ப்பிக் கப்படும்,
வெள்ளிக் கிழமை வேதபா ராயணம்,
உள்ளங் களிக்க உயர்ந்த கத்தூரி,
புனுகு, ஜவ்வாது, மஞ்சள், சந்தனம்,
புத்தம் புதிய பாலொ டபிஷேகம்,
சனியன் றடியார் தம்வினை தீர்ந்திட
தனியாய் விளக்கது ஏற்றிட வருவர்,
மாவிளக் கேற்றிட மக்கள் பலரும்
310 மாவொடு வருவர் மாலுக்குப் படைக்க;

கனகம் பொழியும் கனகா பிஷேகம்,
தினமும் பலவகை மஞ்சன நீராட்டம்,

நிலயம் ஆனந்தம் நித்தியா பிஷேகம்,
நித்தியக் கல்யாணம் பச்சைத் தோரணம்,
பச்சைக் கர்ப்பூரம். பரிமளப் பொருள்கள்,
இச்சை யொடுபெற எண்ணிலா வகைகள்;
ஆண்டுத் திருவிழா
ஆண்டில் நான்கு நாட்கள் அழகிய
ஆழ்வார் 'கோவில் ஆழ்வார்' மஞ்சனம்,
உகாதி, மிதுன கடக சங்கிரமம்,
320 உத்தம தீபாவளி, பிரம்மோற் சவம், முன்;

உற்சவ மூர்த்தி தேவிய ருடனே,
ஊஞ்சல் சேவை தினமும் காணலாம்,
வசந்த உற்சவம் சித்திரை தன்னில்
எப்போதும் திருவிழா இங்கே சத்தியம்;
ஆண்டுக் கொருமுறை அலங்காரத் திருவிழா;
ஈண்டுப் புரட்டாசித் திங்கள் தன்னில்
தரும நெறியுடை சென்னை நகரில்,
தருமச் சிந்தனை உடையார் கூடி,
திருப்பதி குடையது விருப்பொடு சமைத்து.
330 திருப்பதி நாதனுக்கு மலைமீது படைப்பர்;

கருட வாகனம், கல்ப விருட்சம்,
மருளிலா சூரிய, சந்திரப் பிரபை,
அனுமந்த வாகனம், ஆனை வாகனம்,
அனுதினம் சுமக்கும் சேடன் வாகனம்,
அன்ன வாகனம், அரிமா வாகனம்,
பின்னும் குதிரை வாகனம் மீதிலும்;
பல்லக்கு தன்னிலும், பார்மிசைத் தேரிலும்
மெல்ல முத்துப் பந்தர் கீழும்;
எல்லார் கண்டிட எழில்மிகு உற்சவம்,
340 நல்லார் களிக்க நாட்டில் நடக்கும்;

ஆயுத பாணி
பெருமாள் தன்னுடைய பங்கயக் கரங்களில்
பரமசோ பையொடு பலவித ஆயுதம்,

சங்கு சக்கரம் வில்,வாள் கதையென
மங்கள கரமாய் மாண்பொ டிருக்கும்;
பார்த்தனுக் கருளிய பாஞ்ச சன்னியம்
பார்தனில் இடபனை அறுத்த சுதர்சனம்
பண்டு திருமால், சங்கு சக்கரம்
தொண்டை மானுக் கருளின அவையே
அருளியஃ சங்கு, சக்கரம் இரண்டை
350 அருளொ டிராமா னுசர்க்கா யேற்றார்,

தளிகை தளிகை யுள்ளே தன்னிக ரிலாமணம்,
தளிகை, பலவும் தயாரா குமிங்கே;
ததியோ தனமும், புளியோ தரையும்,
தேன்குழல், தோசை, மனோகரம், லட்டு,
பொங்கல், பாயசம், சர்க்கரைப் பொங்கல்,
தங்கநிறக் கேசரி, பாத் சா காபாத்,
அதிரசம், அப்பம், பெருவடை, போளி,
அதிரசம் மிக்க பிரசாத மாங்கே.

தான்பெற்ற பேறு வீங்கு நீரருவி வேங்கட மென்னும்,
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
360 விரிகதிர் ஞாயிறும், திங்களும் விளங்கி,

இருமருங் கோங்கிய இடைநிலை தானத்து,
மின்னுக் கொடியுடுத் து விளங்கு விற்பூண்டு,
நன்னிற மேகம் நின்றது போலப்,
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்,
தகைபெறு தாமரைக் கைகளி லேந்தி,
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு,
பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய,
செங்கண் நெடியோன் நிறையுடை - வண்ணமும்,
370 அங்கண் சுந்தரி, மார்பிற் கிடத்தலும்,

என்கண் கண்டது, என்னுளம் மகிழ்ந்தது,
முன்வினை தீர்ந்தது, வெவ்வினை யறுந்தது,
திருமகள் மார்பன் திருமால் காண
திருமுடி நீக்கித் திருமண் சாற்றினேன்;
கால்கள் செய்பயன் கடுகி நடந்தன,
கைகள் மகிழ்ந்து கூப்பி நின்றன,
கண்கள் மலர்ந்து கண்ணனைக் கண்டன,
செவிகள் திறந்து, அவன்புகழ் மடுத்தன,
வாயது உவந்து வாமனன் பாடியது,
380 நாயினு மடியேனை ஆட்கொள் என்றது;

திருக்கோயில் கண்டேன், திருமகள் கேள்வன்,
திருக்கோலம் கண்டேன், திருவடி பற்றினேன்,
அருளாளன் அவனும் அடியேனை ஏற்றான்;
அருளொடு பரமபதப் பேற்றினை அளித்தான்;

பக்தர் வேண்டுதல்

திருக்கோயில் வலம்வந் தனைவரும் நின்றனர்;
திருக்கோயில் காவலர் வழிவிட நகர்ந்தனர்;
திருவுடைப் பெயர்கள் தெருவெலா மொலித்தன,
"திருமகள் மார்பினன் திருமலை வாழ்ந்திடும்
திருவேங் கடமுடை யாய்,கோ விந்தா,
390 திருமாலே, ஏழுமலை ஆண்டவா, தேவா,"

என்றுமே பக்தர் எண்டிசை ஒலிக்க
என்றுமே தம்வினை நீங்கிட வேண்டினர்.

சாற்றுமறை

வினைதீர்த் தருள்வான் வேங்கட வனென்றே
கூனைதீர்த் தமெனத் தூயநல் லுளத்தொடு
வேண்டினர் வினைகள் தீர்த்திடும வேங்கடவா,
வேண்டின வரங்கள் நல்கும் வைகுந்தா'
செங்கட் யேமாய் பிரகலா தனுக்கருள
எங்கள் நாயகன் எழுந்தரு ளினனென.
நம்பி ஜீயர் நாவலர் கூடியே
400 சாற்று முறையில் சாற்றுவர் மறைகள்;

ஆற்றுப் படை

திருப்பதி சேர்ந்து திருமலை ஏறிட
அரும்பதி அணுகி அருமறை பரவும்
திருமலை முதற்படி தன்னில் வணங்கி,
ஒருமலை படிகள் ஏறியே நடந்திட
முழங்கால் முடிச்சில் மூச்சு விடலாம்;
முழங்கும் முகில்தொடு காளி கோபுரம்,
கண்டு செல்ல வண்டுகள் பாடிடும்,
தெண்ணீர்த் துளிகள் கொண்டநல் மலர்கள்
கானில் பலவுண்டு கண்டு மகிழலாம்;
410 கானில் மானினம் மற்ற விலங்குகள்,

ஆனை, சேடன், குரங்கு நரியினம்,
வானில் பறக்கும் பாடும் புள்ளினம்,
பலவும் பூமகள் நாத னடியவர்
பலரும் நல்வழி நடந்திட உதவும்;
வழியினில் மலைவாழ் மக்கள் பக்தரைப்
பழியின்றிக் காத்துப் பரிவொடு நிற்பார்;
ஏழுமலை ஏறிட ஏற்றம் பெற்றிட
எழுப்பிறப் பின்வினை நீங்கி மகிழ்ந்திட
ஊழ்வினை ஒழித்திட உதவும் திருமலைக்
420 கேள்வனைக் 'கோவிந்தா' என்று கூவியே

பதிதனை அடைந்து, பாசறை தங்கி
மதியொடு மாசுடை முடியது நீக்கி
விதியொடு புஷ்கரந் தன்னில் நீராடி
கதியாம் வராகர் கழலடி போற்றி
ஆலயம் புகுந்து அனைவர் தம்மொடு
மாலவன் காணும் மாலொடு நடந்திடு;
ஆலிலை துயின்றான் அழகொடு நின்றிடும்
காலினைக் கண்டு கைகூப்பி நில்நீ;

வேண்டு கோள்

வெவ்வினை நீங்கிட வேத முதல்வனை
430 செய்வினை யாவும் நல்வினை யாகிட,

எவ்வினை யுமவனை ஏத்தும் வினையாக
தன்வினை நீங்கிட தலையது வணங்கி
கைதொழு தேத்திக் காலுற வணங்கி
மெய்தொழு வீழ்ந்து மாலினை வணங்கி,
"தீராத வினைதனைத் தீர்த்திடும் கோவிந்தா,
மாருத ஆவலின் மாலாகி வந்தேன்,
சக்கர பாணியே சார்ங்க வில்லோய்,
அக்கறை கொள்வாய் அடியேன் மீதே
என்னையு மென்னுடை மைகளை யு மளித்தேன்"
440 என்றுமே ஏத்திட இன்னருள் புரிவான்:

நாமாவளி "மனக்கடல் வாழ்நீ, மாதவா, கேசவா
தனிக்கடலே, தாமோதரா, நரகரி, மூரகரி,
பக்த வத்சலா, பரம தயாளா,
கருணா நிதியே, கமலா பதியே,
கருணைக் கடலே, கார்முகில் வண்ணா
வாசு தேவா, வைகுண்ட நாதா,
பார்த்த சாரதி, பரந்தாமா பாவனா,
ஆர்த்தெழும் அலைகடல் பள்ளிக்கொள் பத்மநாபா,
அச்சுதா, ஆதிமூலா, அரங்கா, முதல்வா,
450 பச்சை வண்ணா, பவழ வண்ணா,

அனாத ரட்சகா, ஆனந்த நிலையோய்,
சனார்த்தனா, வேணு கோபாலா, முகுந்தா,
கருட வாகனா, காளிய மர்த்தனா,
மருதம் ஒடித்தோய், மங்கள நாயகா,
ஆரா வமுதனே, பூமகள் நாதனே,
ஆருக் காதல் கொண்டே னடியேன்,

சரணாகதி இப்போ துணைநான் சேவித்தேன், இனிநான்
எப்போ தும்சேவிக் கும்பலனை அளிப்பாய்;
உனையன்றி வேறே கதியில்லை எனக்கு,
460 உனக்கே சரணம் உண்மைத் தேவ,

வினையேன் வேறே தெய்வந் தன்னை,
அனைத்தும் அறிவாய், ஆதரி எனைநீ,
நன்றே எனக்கு, நல்வாழ் வளிப்பாய்
என்றும் மரமபத சுகமது அளிப்பாய்;"
"என்றே இதய சுத்தியாய் வேண்டுநீ,
நன்றே அளிப்பான் நற்பேறு தன்னை
இன்றே புறப்படு, புறப்படு நீயும்,"
என்றே கூறி விடையும் பெற்றேன்;
யாப்பு யானும் அவனது பொன்னடி பற்றியே,
470 தேனமு தத்தமிழ் மலரினைக் கொண்டே

திருமலை யாற்றுப் படையெனு மழகிய
திருவேங் கடமுடை யானாற்றுப் படையினைத்
திருவருள் கூட்ட யாத்துச் சாற்றினேன்;
"திருவடி பெறவே, திருமகள் அருளவே"
நூற்பயன் பிரகிருதி ரூபமாய்ப் பரவி நின்றிடும்
பிரகிருதி ரூபனைப் பரவித் துதிப்பார்
பிரகிருதி யாத்த ஆற்றுப் படையை
வரமது வேண்டியே அனுதின மோதினால்
திருமலைத் தேவன் வேங்கட நாதன்
480 திருமக ளுடனே தரிசனம் தந்து

அருளுவா னனைத்தும், பிணியது வாராது,
அருள்மிகு மங்கல வாழ்வது பெறுவர்,
வாழ்வர் வளமொடு வையம் மகிழவே
வாழ்வர் வைகுந்தம் புகுந்து நிலையாய்,
வாழிய உலகில் உயிரின மனைத்தும்,
வாழிய நலனே, வாழிய வாழியவே,

# நூல்

-: குறிப்புரை :-

வரி

1. நூல்களின் முதலில், மங்கல மொழிகளுள் 'உலகமென்பதை அமைப்பது தமிழ்க் கவிஞர் மரபு, "உலகம் யாவையும்" என்று தொடங்குகிறது சம்பராமாயணம், அவ்வாறே இந்நூலும் 'உலகம்' என்று தொடங்கப் பட்டது.

2. அலகிலா - குற்றமற்ற,

8. - 'பண்' - இசை

9. - 'தேட தெலுங்கு' என்பதைக் குறிக்கிறது,

10. 'கன்னடம்' கஸ்தூரி என்பர்

11, 12 "பொன்னும் மணியும் பொலிந் தோங்கிப் பார்மகட்கு மினனும் மணிமுடியாம் வேங்கடமே" என்கிறது திருவேங்கடமாலை,

14. ஒருமலை - ஒப்பற்றமலை.

15. கருடாசலம்.— இரணியாட்சனைக் கொன்ற பிறகு ஸ்ரீ வராஹமூர்த்தி ஒரு நாள் கருடனை நோக்கி "இந்நில வுலக மாந்தர் என்னைப் பக்தியால் பணிந்து பூசித்து மேம்பாடுற நாம் உலகில் தங்கக் கருதினோம். எம் உளத்திற்கு ஒத்திடும் குன்றம் ஒன்றை பைநேதம் சென்று எடுத்துவா" என ஆணையிட கருடனும் இக்குன்றைக் கொண்டு வந்து வைத்தான் என்கிறது மார்க்கண்ட புராணம்- விருஷபாசுரன்

16. விருஷபாத்திரி: விருஷபாசுரன் என்கிற அரக்கன் பகவானோடு சண்டை செய்து மடிந்த படியால் அவன் பெயரைக் கொண்டு 'விருஷபாத்திரி' என்று பெயர் பெற்றது.

17. சிந்தாமணி - மனிதனுக்குத் தொல்லைகள் பெருகி அதனுல் சிந்தனை எழுந்து வருத்த மடைகிருன், அந்தகைய மனத் துயரங்களை வேங்கட மலை தீர்த்து விடுவதால் சிந்தாமணி எனப்பட்டது,

18. ராமகிரி :- ஸ்ரீ ராமன் தெற்கு நோக்கிப் பயணம் செய்கையில் ஆஞ்சனேயரின் தாயாகிய அஞ்சனுதேவி இராம பிரானின் சேவையை விரும்பி முனிவர் பலர் திருமலையில் தவம்புரிவதைக் கூறி அங்கு தங்கிச் செல்லுமாறு ஸ்ரீ ராமனை வேண்டிக்கொள்ள, இராம பிரானும் ஆங்கண் போந்து பூசனையை ஏற்ருன். எனவே 'இராமகிரி' ஆயிற்று; மற்றும் மத்திய தேச ராமன் எனறும் ஓர் அந்தணன் திருமலை அடைந்து சனத்குமாரன் அடிபணிந்து இலக்குமி மந்திர உபதேசம் பெற்று அதன்மூலம் பெருமாளின் காட்சி பெற்ருன். எனவே 'இராமகிரி' என்றும் கூறுவர்.

19. கனககிரி - சூரியோதய, அத்தமன காலங்களில் அவ்வொளியின் காரணமாக 'சுவர்ணம்' போல் காட்சி அளிப்பதாலும், எப்பொழுதும் அங்குச் செல்வம் குவிவதாலும் இன்று உலகிலேயே இலட்சக்கணக்கான ரூபாய்களும் பொன்னும் பலவும் சேர்வதால் 'கனககிரி'

20. கர்ப்பகிரி – தாய்க்கர்பத்தில் குழந்தை காக்கப் படுவது போல் இம்மலைவாழ் தேவன் தன்னடியாரைக் காக்கிருன். எனவே இம்மலை 'கர்ப்பகிரி' யாம். பெருமாள் தன்னடியார்களுக்கு காமிதார்த்தங்களை அருளிச் செய்வது உலகம் அறிந்ததே,

21. நரசிம்ம மூர்த்தியாகி நாராயணன் இரணியனைக் கொன்றதால் இது 'நரசிம்மகிரி' எனப்பட்டது,

22. நாராயணகிரி - நாராயண முனிவர் ஸ்ரீ மந்நாராயணனைத் தரிசிக்க வேண்டி பிரம்மனை நோக்கித் தவம் இயற்றினுர், பிரம்மன் சேடாசலத்தில் திருக்கோனேரிக் கரையில் பெருமாள் எழுந்தருளியுள்ள இரகசியத்தைக் கூற, முனி

வர் யோகமும், தவமும் இயற்றி பகவான் தரிசனம் பெற்றார். அம்மலைக்குத் தன்பெயரிட வேண்டிக் கொள்ள 'நாராயணகிரி' என்ற பெயராயிற்று,

24. இங்குப் பலரும் தங்கி இறைவன் அருளால் தங்கள் ஞானத்தை வளர்த்துக் கொள்கின்றனர், ஞானத்தை அருளும் மலை யெனவே 'ஞானகிரி' ஆயிற்று

25. பெருமாள் திருமலையில் ஸ்ரீநிவாசன் என்ற பெயரில் தவம்இயற்றி வர அவர் மீது புற்று மூடிவிட அப்பொழுது பிரம்மனும், சங்கரனும் பசுவும், கன்றுமாய் வந்து அரியைத் திருப்தி செய்து திருவேங்கடத் தான் அருள் பெற்றார் என்பது புராணவரலாறு.

26. நீலன் என்பவன், இங்கு வந்து தங்கியதால் 'நீலகிரி' எனப்பட்டது.

27. ஒரு சமயம் ஸ்ரீலக்ஷ்மி சமேதராகப் பெருமாள் இருக்கையில், பிருகு முனிவர் ஆங்கு போந்து திருமாலைத் தன் காலால் மார்பில் உதைக்க அவர் முனிவருடைய காலுக்கு நோய் உண்டாயிருக்குமென்று அவர் பாதங்களைப் பிடித்தார் அது கண்ட ஸ்ரீலக்ஷ்மி கோபங் கொண்டு கொல்லாபுரம் வந்து சேர்ந்தாள். எனவே அச்சீமகளைத் தேடி வந்தார் சீனிவாசன்,

28. (25இல்) கூறிய வரலாறும், மற்றும், பிரம்மதேவன் திருமலை சீனிவாசனுக்கு உற்சவம் செய்து மகிழ விஷ்ணுவும் அவருக்கு அருள் பாலித்தார். எனவே அவ்விழா "பிரம்மோற்சவம்" எனப்பட்டது.

29. அஞ்சனாத்திரி :- திரேதாயுகத்தில் அஞ்சனாதேவி மகப் பேறின்றி மதங்கமாமுனியின் சொற்படி வேங்கடமாமலை அடைந்து ஆகாச கங்கையில் மூழ்கித் தவம் இயற்றி வாயுதேவன் உதவியாலும், பெருமாள் அருளாலும் அனுமானைப் பெற்றெடுத்தாள். அவள் தவம்

செய்ததால் அஞ்சனாத்திரி' ஆயிற்று என்ற என்ற வரலாறு பிரமாண்ட புராணத்திலும், காந்தப் புராணத்திலும் உள்ளன.

30. சேஷாத்திரி:- துவாபர யுகத்தில் ஆதிசேஷனுக்கும் வாயு தேவனுக்கும் அவரவர் பலம் குறித்து வாதம் நேரிட. ஆதிசேஷன் தன் பலத்தைக் காட்ட மலையைச் சுற்றிக் கொள்ள, அம்மலையை வாயுதேவன் ஆதிசேஷனோடு அப்புறம் எறிந்து விட, ஆதிசேஷன் அடங்கி அங்கேயே அமர்ந்ததால் 'சேஷாத்திரி' எனப்பட்டது. இது பெருமாள் பிரம்மாண்டதினுள் உள்ள வரலாறு.

31. வேங்கடகிரி: ஸ்ரீசைலத்து மேற்புரம் நந்தனபுர அந்தணன் ஒருவன் புரந்தரன் என்பான், ஒரு புலைச்சியுடன் கூடி மாமிசம் உண்ணுதல், அந்தணர்களைத் தாக்குதல் போன்ற தகாத காரியங்களில் ஈடு பட்டு, இறுதியில் உடல் முழுவதும் நோய் முற்றி அவதியுற அப்புலைச்சியும் அவனை விட்டு நீங்கினாள். அந்தணன் மிக்கத் துயருற்று சேஷகிரி மீதேறி வரும்போது அவன் பாவமெல்லாம் அக்கினி தேவனால் எரிக்கப் பட்டு விட, அவன் ஒளிபெற்று விளங்கினான். அதுகண்ட முனிவர்கள் அதிசயம் உற்றனர், எனவே முனிவர்கள் அம்மலைக்கு 'வேங்கடாசலம்' எனப் பெயரிட்டனர், வேங்கடாசலம், வேங்கடாகிரி இரண்டு ஒரே பொருளைத் தரும்.
வே-பாவம்; கட-கொளுத்தப்படும், அதாவது வேம், பாவம் வெந்து ஒழியச் செய்வதால் 'வேங்கடமலை' எனப்பட்டது.

32. மற்றும் திருவேங்கடவன் கோயில் கொண்டிருப்பதாலும் அப்பெயர் பொருந்தும் என்றவாறு.

33. வைகுண்டகிரி மரி 15இல் கூறப்பட்ட வரலாற்றில் கருடன் அதாவது பெரியதிருவடி வைகுண்டத்திலிருந்து இக்குன்றத்தைக் கொண்டு வந்தாராம். எனவே இது 'வைகுண்டகிரி' எனப்படுகிறது.

34. இடபாசலம் :- ஸ்ரீனிவாசன் தன் சேனைநாதருடன் கூடி இடபாசுரனை எதிர்த்துப் போர்புரிகையில் அசுரன் மாயப் போர் புரிந்து நின்றான். அவ்வமயம் பெருமாள் சக்கரத்தை அவன் மீது பிரயோகிக்க அவன், தன் உடல் சக்கராயுதத்தால் அறுபடுவதுகண்டு இறைவனின் அருள் வேண்டி நின்றான். மற்றும் அவன் வேணடிக் கொண்டபடி மலை 'இடபாசலம்' எனப் பெயர் பெற்றது.

36. இந்திரன் கௌதமர் மனைவியை அதாவது அகலிகையை விரும்பிட, அவர் சாபத்தின்படி அவன் உடலெங்கும் இழி குறியாய்விட அவன் 'திருவேங்கடமலை அடைந்து விசுவசேனத்திர்த்தத்தில்முழ்கி, அதன் கரையில் அமர்ந்து தவம் செய்து சாபம் நீங்கப் பெற்றான் என்கிறது வாமன புராணம்.

39. 40 ஆதிசங்கரரின் "கனகதாரா ஸ்தோத்திரத்திலும்"(18) ஸ்ரீவேதாந்த தேசிகரில் ஸ்துதி 13 இலும் அஷ்டதிக் கஜங்கள் மகாலட்சுமியை நீராட்டிப் பூசனை புரியும் செய்தி ஆதிசங்கரரின் "கனகதாரா ஸ்தோத்திரம்'' 19இலும், ஸ்ரீ வேதாந்த தேசிகரின் 'ஸ்ரீ ஸ்துதி' 13 இலும் காணலாம். எனவே மார்புறையும் லட்சுமி பெற்ற துதி பெருமாளையும் சேர்கிறது.

"எண்டிசை கஜங்கள் திர்த்தம் ஏந்தி வந்துனை நீராட்டி
வண்டிசை பாடிடும் மலர்கள் கொண்டு புரிந்தன
...................... (கனகதாராஸ்தோத்திரம் 19)
..................................

அமுத நீரால் ஆனைகளெட்டும் அன்பு நீராட்டின
(ஸ்ரீ ஸ்துதி 13)

42. குரு, சுக்கிரன் :- ஆதி நாயகன் உபரிசருவசு, பிருகஸ் பதி (குரு) சுக்கிரன், அகத்தியர் முதலியோர்க்குக் காட்சி அளித்தார். என்வே நவக்கிரகங்களும் பெருமானைத் துதிசெய்தன எனக்கூறப்பட்டது.

44. பொன்றச் சகட முதைத்தான்: பெருமாள் குழந்தை யாகத் தொட்டிலில் கிடக்க கம்சனுல் ஏவப்பட்ட சகடா சுரன் சக்கர வடிவில் கண்ணனைக் கொல்ல வர கண்ண னும் அவனைக் காலால் உதைத்துக் கொன்ருர்.

48. தீர்த்தங்கள் பல அம்மலையில் 66 கோடி தீர்த்தங்கள் உண்டு; அவற்றுள் 1008 விளங்கியவை; ] இறந்தவை 216 சகல புண்ணியமும் தருபவை 108; பக்திவைராக்கியம் தருபவை 68; விபவம் தருபவை 6; முக்திசேர்ப்பவை 26 "என்று திருவேங்கடத்தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.

49. அத்தி தீர்த்தம் :- ஸ்ரீ னிவாசப் பெருமாளின் ஆலயத் துக் குக் கிழக்கே உள்ளது. இதில் துவாதசி ஸ்னானம் புண் ணியம் தரும் ஜாபாலி தீர்த்தம். கோயிலுக்கு மேற்கில் உள்ளது. இதில் 'ஜாபாலி' என்ற ரிஷி தவம் புரிந்து மோட்சமடைந்தார்.

50. கமலத் தீர்த்தம் : (அ) பத்மதீர்த்தம்:- ஸ்ரீ லக்ஷ்மி தேவி அவர் மேல் மங்கையாய் அவதரித்த இடம். ஸ்ரீ லஷ்மி ஜனன காலமாகிய கார்த்திகை மாதம் சுத்த பஞ்சமி யன்று புண்ணியஸ்நானம் பக்தர்களுக்கு மோக்ஷ மளிக்கும்

51. நாரததீர்த்தம்: தெற்கில் உள்ள இங்கு நாரதர் தவம் செய்ததாகப் புராண வரலாறு. இது வடகிழக்கில் ஒரு மைலில் உள்ளது.

52. பாண்டவதீர்த்தம்:- அரசிழந்த பஞ்சபண்டவர்கள் இத் தீர்த்தத்தில் நீராடி ஸ்ரீநிவாசப் பெருமாளின் அருள் பெற்று மீண்டும் ராஜ்யபதவி அடைந்தனர். இதில் வைகாசி மாதம் கிருஷ்ண பக்ஷ துவாதசியில் நீராடி இறையடி தொழுவார். இழந்தவற்றைப் பெறுவர். வாழ் வில் வெற்றி காண்பர்.

53. குமாரத்தாரிகை தீர்த்தம் :- இது பாபவிநாசத்திற்கு வடமேற்கில் உள்ளது. குமாரஸ்வாமி தாரகாசுரனைக்

கொன்ற பிரம்மஹத்திதோஷம் நீங்க இந்நீரில் ஆடி விமோசனம் பெற்ருர்.

மற்றும் முதிய பிராம்மனர் ஒருவர் இத்தீர்த்தமாடி யௌவனம் பெற்ருர் ஒன்றும் கூறப்படுகிறது.

மாசிமாதம் பௌர்ணமி கூடிய மகநாளில் இதில் சர்வ தீர்த்தங்களும் வந்து சேர்வதால் அன்று மூழ்கி இறைவனருள் பெறுவார். இராஜசூயயாகப்பலன் பெறுவர்.

54. கோதர்ப்ப தீர்த்தம் :- பாண்டவ தீர்த்தத்திற்கு மேற்கில் உள்ளது பசுவடிவில் உள்ள குன்றின் வாயிலிருந்து நீர் வருவதால் இது 'கோகர்ப்ப' தீர்த்தம் எனப்பட்டது.

55. தும்புரு தீர்த்தம் :- ஆலயத்துக்கு வடக்கில் 12 மைல் தூரத்தில் உள்ளது, நாரதர் முன் தும்புரு விஷ்ணுவைப் போற்ருமல் தேவேந்திரனுல் தன் வீணை ஒளிர்வதாகக் கூற நாரதர் தும்புருவுக்குச் சாபமிட்டார், தும்புரு வருந்தி திருமலையில் இத்தீர்த்தத்தில் மூழ்கி திருமால் திருவடிகளைத் தியானித்து பெருமாள் காட்சி பெற்று நற்பதவி பெற்ருர் பங்குனி மாதம் பூரணை கூடிய உத்தர நட்சத்திரத்தில். இதில் மூழ்குவார் வேண்டுவன பெற்று பரமபதம் அடைவர்.

56. கிருஷ்ண :- தைமாதத்தில் பூரணைப் பூசநாளில் இதில் நீராடின் இகபர சுகம் பெறுவர்.

57. கபிலதீர்த்தம் ஆழ்வார் தீர்த்தம் :- இங்கு கபிலமாமுனிவர் நீராடி இறைவனருள் பெற்ருர் என்பர். இங்கொரு லக்ஷ்மிநரசிம்மர் ஆலயம் இருக்கிறது. திருப்பதிக்கு யாத்திரை வருவோர் முதன்முதல் இங்கு நீராடிவிட்டே மலை ஏறுவர். இந்த கபிலதீர்த்தச் சாலையில் தான் தேவஸ்தான அலுவலகம் உள்ளது.

76. சனகஸ நந்தன தீர்த்தம் :- பாபவிநாச தீர்த்தத்தின் வடக்கில் உள்ளது, சனகஸ நந்தன முனிவர்கள் இங்கு

நீராடி பகவான் அருள் பெற்று முக்தி அடைந்தனர் இதில் மார்கழி மாதம் சுக்கில திரயோதசியில் நீராடுவது ஸ்ரேஷ்டம் என்பர்.

78. இராமகிருஷ்ணர் தீர்த்தம் :- பாபவிநாசத்துக்குக் கிழக்கில் உள்ளது. இராமகிருஷ்ணர் என்பார் ஒருவர் பல்லாண்டுகள் இங்கு தவம் செய்ய புற்று மூடியது. இந்திரன் அவர் தவம் கெட ஏழுநாட்கள் மழை பெய்வித்தான். புற்று கரைந்தது. ஆனால் அவர் நிஷ்டை கலையவில்லை பெருமாள் பிரத்தியட்சமாகி மோட்சம் அளித்தார். தை மாதப் பௌர்ணமி நாள் நீராட்டம் பயன் தரும்.

81. பாபவிநாசம் :- ஆலயத்திற்கு வடமேற்கில் உள்ளது. பிரம்ம ராட்சஸி பிடித்த ஒருவர் அகத்தியர் அறிவுரைப் படி இதில் நீராடி முக்தியடைந்தார் ஐப்பசி மாதம், சுக்கிலசப்தமியில் இதில் நீராடினால் பாபங்கள் தொலையும்

82. ஆகாயகங்கை :- இது ஆலயத்துக்கு வடக்கில் உள்ளது. திருமலை நம்பி என்ற பக்தருக்காக ஏற்பட்டதிது என்பர். ஸ்ரீதிருவேங்கட நாதர் ஆராதனைக்கு இதிலிருந்தே தீர்த்தம் கொண்டுவரப்படுகிறது. சித்திரை மாதப பூரணையில் சித்திரையில் ஸ்நானம் உத்தமம்.

86. விராஜநதி :- இது ஸ்வாமி ஆலயத்தில் மூன்றுவது பிராகாரத்தில் உள்ளது.

85. கஜேந்திர புஷ்கரணி :- ஆலயத்திற்கு வடமேற்கில் ஒரு மைலில் உள்ளது.

87. சாமி·புஷ்கரணி :- மார்கழி மாதம் சுக்கிலபக்ஷாம் துவாதசியில் சூரியன் உதயம் ஆவதற்கு ஆறு நாழிகைக்குள் எல்லாத்தீர்த்தங்களும் இதில் வந்து சேரும். அந்தக்காலமே எதனிலும் விசேடம் உடையது. இது கங்கையினும் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

88-89 புஷ்கரணி தீர்த்தம் ஒரு தீர்த்தமாகவே தோன்றின

லும், அதில் ஒன்பது தீர்த்தங்கள் அந்தர் பூதமாய் இருக்கின்றன, அவற்றைக் குறிக்கின்றன இவ்வரிகள்

95. வள்ளி.........தன்னில்—வள்ளிக் கொடிகள் ஆற்றினிடம் பொருந்தியிருக்கும்

96. வள்ளி புனர்ந்தான் — வள்ளியை மணந்த ஆறுமுகன்

100 கள் அவிழ் — தேன் சொரிகின்ற

101. பொன்மலை — மேருமலை

102. வெள்ளிமலை — கைலயங்கிரி
"தெள்ளியதோர் பீடகுளுஞ்சீர் கேட்டுப் பொன்மலையும் வெள்ளிமலையும் பணியும் வேங்கடமே" திருவேங்கடமாலை

104. வேங்கடம் — கொடியவினை

112. ஆதிமூலம் — திருமால்

.4. மானினப் பெண்கள் — மான்போன்ற மருட்சி உடைய பெண்கள்.

115. மீனெனும் கண் மீன் போன்ற கண்

119. வெம்புலி — கொடியபுலி,

120. கிம்புரி — யானை

125. தேனினை — தேனை. 126, தேனினை — மதுவை 127, தேனெனும் இனிய

129. களிறு — ஆண்யானை, பிடி — பெண்யானை

131. ஊடிய பிடியது :
'ஒன் சிந்துரத்தை வெறுத்தாடும் பிடி வேழம்' திருவேங்டமாலை,

134. வேய் முத்தினை உதிர்க்கும். முத்து பிறக்கும் இடங்களில் மூங்கிலும் ஒன்று,

138. பண்ணொலி — இசை

139. 142 — பிணிகள் தீரும் என்றவாறு

'பித்து மலடுமை பேய் குருடு கூன் செவிடு
மெய்த்துயர் நோய் தீர்த்தருளும்' என்ற திருவேங்கட
மாலை காண்க

144. பாலாஜி. வட நாட்டார் வெங்கடாசலபதியை 'பாலாஜி
என அழைப்பர்

146 நின்ருன் கோலம், நின்ற வண்ணம் உள்ள சீனிவாசன்
அழகினை,

150 — 155 உடற் பரவசநிலை.

160 - நிர்மல வராகம் — தூயவராகப் பெருமாள், விஷ்ணு

167 - திருப்பதியை இறைவன் ஆணைப்படி விசுவகர்மா ஏற்படு
த்திஞர்,

173 - வரி 25 வரலாறு காண்க

179 - வகுளாபரணன் — திருமால்

188 - இடுக்கண் — துன்பம் 189. முடி — கிரீடம், தலைமுடி

190 - மின்னும் பட்டு —ஒளிர்கின்ற பட்டு

193. எற்றுக் கிவையே - இவைஎல்லாம் ஏன்? தேவையில்லை
என்றவாறு

199 - வைகறை — விடியற்காலை

200 - மெய்கறை — உடல் அழுக்கு, பாவம்

204 - மைவண்ணன் — கருநிறமேனி கொண்ட திருமால்

205 - 'இழியது பட்டர் பிராறுக் கருளிய'

'பாண்டியன் கொண்டாப் பட்டர் பிரான் வந்தானென்
றீண்டிய சங்கம் எடுத்தூத — வேண்டிய வேதங்களோ
திரிரைந்து கிழியறுத்தான் பாதங்கள் யாமுடைய பற்று'
என்பது தனியன்

பாண்டியன் சபையில் பரதத்துவ நிர்ணயம் செய்து

விஷ்ணுவே முழுமுதற் கடவுள் எனக் காட்டிய பெரி யார்க்குப் பொற் கிழி கிடைத்த வரலாறு.

208 - சுப்ரபாதம் — பள்ளியெழுச்சி, தினமும் விடியற் காலை யில் பாடப்படுவது
'கௌசல்யா ஸுப்ரஜா ராமா — பூர்வா சந்தியா பிர வர்த்ததே' என்று தொடங்குவது,

213. முதல் 222 வரை தசாவதார வருணனை,

தேவுடைய மீனமா யாமையா யேனமாய் அரியாய்க் குறளாய் முடிருவி னிராமனுய்க் கண்ணனுய்க் கற்கியாய் என்று பெரியாழ்வார் பாசுரம்

மற்றும்

சுப்ரபாதத்தில்,

"மீனுக்ருதே கமட கோல - நருசிம்ம வர்ணிந் ஸ்வாமின் ஸரய்வத தபோதன ராமசந்திர; சேஷாம்ச ராமயது நந்தன கல்கிரூப" என்பது காண்க,

213. வேதங்களைக் கவர்ந்து சென்று சோமகா சுரனைத் திரு மால் மீன்வடிவம் கொண்டு சென்று அழித்து வேதங் களை மீட்டார்

214. மேருவை மத்தாக்கி வாசுகியை நாணுக்கி அமிர்தம் கடை யும் போது மலை உள்ளே செல்ல ஆமை வடிவில் அதைத் தாங்கி நின்று அமிர்தத்தைத் தேவர்கள் பெற்றுய்யவும். அதன் மூலம் மாதவர் நல்வாழ்வு பெறவும் உதவினர்,

215. உலகைக் கடலுக்குள் ஒளித்த இரணியாக்ஷனை வராக வடிவம் எடுத்து கொன்று உலகை மீட்டார் விஷ்ணு.

216. மற்றும் உலகமக்கள் இரணிய கசிபின் தொல்லை பொறுக் காமல் அவதியுற நரசிம்மா வதாரம் எடுத்து அவனைக் கொன்றருளினர்.

217. மாவலி கர்வத்தை அடக்க வாமனன் உருவில் சென்று மூன்றடி மண் யாசித்து, பூமியை ஓரடியாலும், ஆகாயத்தை ஓரடியானும் அளந்து மூன்ருவது அடியை அவன் தலைமீது வைத்து பாதாளம் அனுப்பிவைத்தார்.

2 8. கையில் பரசு என்னும் கோடாரி ஏந்தி தன் தந்தையைக் கார்த்தவிரியன் கொன்றதால் மன்னர்களை எல்லாம் கொல்வதாகச் சபதம் கூறி கடைசியில் ஸ்ரீ ராமனுடன் வாதிட்ட பரசுராமன் வரலாறு,

219, மன்னராகி மண்ணுள்வதே அன்றி உலகில் மாந்தர் கைப்பிடிக்க வேண்டிய அறவழிகளைத் தானே நடந்து காட்டிய இராமாவதார வரலாறு

220. கண்ணனுகி கோபியர்களை மகிழ்வித்த வரலாறு - சரசம் காட்டிய வரலாறு, மற்றும் பகைவர்களை வென்றதும், பாண்டவர்களுக்கு உதவிய சாகச வரலாறு

221. பலராம அவதாரத்தில் கலப்பையைக் கைதனில் ஏந்தி கண்ணனுக்கு மூத்தவனுய் தோன்றிய வரலாறு,

222. கலியுகந் தனில் துயர் நீக்க வந்த கற்கி யவதாரம்,

223 - 230 தோமாலை, விசுவரூபதரிசனம், ஏகாந்த சேவை குறிப்பிடப்பட்டன,

233. முதல் 282 வரை கேசாதி பாதம் வருணனை.

237, 238 குழல் — முடி; குஞ்சி — முடி

241, வதனம் — முகம்

243 - வியனுடை — அதிசயிக்கத் தக்க

245 - நாசி — மூக்கு

259 - திருத்துழாய் மாலை — துளசி மாலை,

262. வண்டார் மலர் மகள் — வண்டுகள் ரீங்காரம் செய்து கிடக்கும் தாமரையில் இருக்கும் இலக்குமி,

264 - பங்கயம் — தாமரை

266 - கூருகிர் — கூர்மையான நகம்

267 - திருப் பொன்னுடை — பீதாம்பரம்

270 - உந்தி — கொப்பூழ்

273 - மருட்சி — மயக்கம்

275 - சலங்கை — சிறுவயதில் குழந்தைகட்கணிவிப்பது,

276 - பெரியவர்களுக்கு அணிவது வீரக்கழல்

278 - மண்மகள் — நிலமடந்தை, பூமிதேவி.

279 - பெரிய திருவடி — கருடன்; சிறிய திருவடி — அனுமான்,

281 - 290 வாரத்தில் ஒவ்வொரு நாளும் நடக்கும் நிகழ்ச்சிகள்

287 - செவ்வாய் — செவ்வாய்க்கிழமை

288 - செவ்வாய் — சிவந்த வாய்

292. ஆகமுடை — மார்பிலுறை

293 - புதன்கிழமை நடக்கும் ஸஹஸ்ர கலசாபிஷேகம்

295 - குரு ---- சேவை :- வியாழக்கிழமைகளில் நடைபெறும் திருப்பாவாடைச் சேவை

302. சுந்தரம் - அழகு.

309 - மாவிளக்கு - மாவினால் விளக்குச் செய்து நெய்யூற்றி ஏற்றப் படுவது. சிறப்பாக புரட்டாசி சனிக்கிழமை களில் ஏற்றப்படும்

313 - நிலயம் ஆனந்த - ஆனந்த விமான நிலயம்,

318. கோவில் ஆழ்வார் திருமஞ்சனம் - ஒராண்டில் 4 நாட்கள் நடைபெறும்

320 - பிரம் மோத்சவம், முதன் முதல் பெருமாளுக்குப் பிரம்மன் நடத்தியதாகப் புராணவரலாறு எனவே 'பிரம்மோத்சவம்

329. திருப்பதி குடை, - சுமார் 150 ஆண்டுகளுக்கு மேலாகச்

சென்னையிலிருந்து புரட்டாசித் திங்கள் கருடோற்சவம் அன்று திருவேங்கட முடையானுக்குச் சமர்ப்பிப்பதற்காக 2 பெரியகுடைகளும் 4 சிறியகுடைகளும் கொண்டு வரப் படுகின்றன. இதை அப்பொழுது ஸ்ரீ வெங்கட கிருஷ்ணப்ப செட்டியார் தொடங்கி வைத்ததாகக் கூறப்படுகிறது,

330 - 340 பிரம்மோற்சவ விவரம்

343 - விஷ்ணுவின் பஞ்சாயுதங்கள்,

350. சோழ சக்கரவர்த்தியின் மகன் தொண்டைமான் வெற்றி பெற பெருமாள் அவனுக்கு சங்கு, சக்கரம் அளித்தரு ளினர் என்பது புராண வரலாறு, பின்னர் ஸ்ரீ ராமானுஜர் காலத்திலேதான் மறுபடியும் அவை பெருமாள் கரங்களில் வந்தடைந்தன என்பர்.

351 - 358 திருமடைப்பள்ளியில் தயாராகும் பலகார வகைகள்

355 - 369 சிலப்பதிகார வரிகள்

359. வீங்குநீர் - மிகவும் பெருகி விழும் தீர்த்தம்,

360 - உச்சி மீமிசை - உயர்ந்த குவட்டின் மேல்

361 - விரிகதிர் - விரிகின்ற ஒளி

362 - இரு மருங்கு - இரண்டு பக்கம் ; தானம் - இடம்

363 - மின்னுக் கோடி - மின்னலாகிய புதிய ஆடை
விற்பூண்டு - வானவில் (அ) இந்திரதனுஸ்

365 - பகையணங்கு - தன திரு பக்கமும் பகைவரை வருத்தும் ஆழி - சக்கராயுதம்

366 - தகைபெறு - அழகு பெறுகின்ற

367 - நலங்கிளர் ஆரம் - அழகு திகழ்கின்ற கௌத்துப மணி மாலை,

358 - பொலம் பூ வாடை - பொன்னுடை (பீதாம்பரம்)

369 - நெடியோன் - திருமால்

371 - என் கண் கண்டது - அடியவர் தன் அககண்ணில் கண்டதை நேரில் கண்டதே போல் கூறுகிறார்,

372 - கண்டதன்பயன் வினை தீர்ந்தது,

384 வரை - தான் நிச்சயம் பரமபேறு பெறுவதாகக் கூறுவது. இது தான் தெய்வ நம்பிக்கை,

387 - 390 பக்தர்கள் கூக்குரல்

399 - 400 - ஜீயர் கோயிலில் எழுந்தருளி சாற்று முறை செய்தல்

403 - முதற்படியில் வணங்கி மலை ஏறுதல் வழக்கம்

406 - 416 இயற்கை வருணனை.

417 - ஏழுமலை ஏறிட முதல் 'ஆற்றுப் படுத்துதல்'

421 - 428 வரை எதிர்ப்பட்ட ஒருவனுக்கு பேறு பெற்ற ஒருவன் என்ன செய்ய வேணடுமென்று எடுத்துரைத்தல்

428 - "காலினைக் கண்டு கை கூப்பி நில் நீ"
திருமுருகாற்றுப்படையில்
"முந்து நீ கண்டுழி முகமமர்ந் தேத்திக்
கை தொழூஉப் பரவிக் காலுற வணங்கி" 251-252 வரிகள்

439 - தன்னை இறைவனிடம் ஒப்படைத்தல்

441 - 454 திருமாலின் பலபெயர்கள் சொல்லி துதித்தல்.
"ஸ்ரீ பத்ம நாப புருஷோத்தம வாசுதேவ
வைகுண்ட மாதவ ஜனார்த்தன சக்கரபாணே
ஸ்ரீ வத்ச சிஹ்ன சரணாகத பாரிஜாத
ஸ்ரீவேங்கடா சலபதே தவ சுப்ரபாதம்" என்ற நாமாவளி காண்க,

456 - 464 பரிபூரண சரணாகதி

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத;
சதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச—
வேங்கடேச ஸ்தோத்திரம்

466. 'நன்றே அளிப்பாள் நற்பேறு தன்னை'
நற் பேறு — பரமபதம்
"விழுமிய பெறல் அரு பரிசில் நல்கு மதி" என்கிறது
திருமுருகாற்றுப்படை

469 - 474 நூல்யாப்புக் காரணம் கூறப் பட்டது,
"திருவருள் கூட்ட யாத்துச் சாற்றினேன்
திருவடி பெறவே திருமகள் அருளவே"

475 - பிரகிருதி - இயற்கை

476 - பிரகிருதி ரூபன் - எல்லாவற்றிலும் நிறைந்துள்ள திரு மால்

477, "பிரகிருதி" நூலாசிரியர் புனை பெயர்

477 - 474 - நூற்பயன் கூறப்பட்டது,

485 - 476 - வாழ்த்துரை கூறப்பட்டது



# திருமகள் துதி

(முதற் பகுதி)

தமிழ் நூல்களில் பிராட்டியைப் பற்றிய தனி நூல்கள் இல்லை. தொண்ணூற்றாறு பிரபந்தங்கள் அல்லது சிற்றிலக்கியங்களில் அந்தாதி என்பது ஒன்று. சரபம் தண்டபாணி சுவாமிகள் என்பார் திருமகள் மீது ஓர் அந்தாதி பாடியுள்ளார் அதுவே 'திருமகளந்தாதி'

திருமகளின் பெருமை வேதத்தில் "ஸ்ரீ ஸூக்தம்" போன்றவற்றிலும், மற்றும் விஷ்ணு புராணம், வராகப் புராணம் போன்ற பல புராணங்களிலும் சில பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளிலும், மற்றும் தந்திரம், உபநிஷதம் போன்ற வடமொழி நூல்களிலும் பேசப் பட்டுள்ளது,

ஆழ்வார்கள் தமது பிரபந்தங்களிலும், இராமாயணக் காவியத்திலும் தாயாரைப் பற்றிய செய்திகள் அடங்கியுள்ளன. ஆழ்வார்களுக்குப் பின் வந்த வைஷ்ணவப் பெரியார்களுள் ஆளவந்தாரின் "சதுஸ் லோகி" பராசர பட்டரின் "ஸ்ரீ குணரத்ன கோசம்; சங்கரரின் 'கனகதாரா' ஸ்தோத்திரம், கூரத்தாழ்வாரின் 'ஸ்ரீ ஸ்தவமும்' வேதாந்த தேசிகரின் 'ஸ்ரீஸ்துதியும், 'திருமகளின்' தோத்திர நூல்களாக அமைந்துள்ளன,

மற்றும் பிற்காலத் தெழுந்த 'திருக்கண்ண மங்கை மாலை', பெருந்தேவித் தாயார் பதிகம், பெருந் தேவித் தாயார் மாலை, 'தாயார் மாலை' போன்றவை திருமகளின் பெருமையைப் புகழ்ந்து பாடுகின்றன. மற்றும் இராமலிங்க சுவாமிகளின் ஆறுவது திருமுறையிலுள்ள "இலட்சுமி தோத்திரம்" ஒன்று உள்ளது.

ஆழ்வார்கள் பெருமாளைப், பிராட்டியுடன் இணைத்தே அனுபவித்தார்கள், பிராட்டியின்றேல், பெருமாளில்லை, இலட்சுமி இல்லாமல் நாராயணன் இல்லை, எனவே இலட்சுமி

நாராயணனாய், சீதா ராமனாய், இலட்சுமி நரசிம்மனாய், ருக்மணி கிருஷ்ணனாகவே வழிபட்டனர்

அதே பாணியிலே வேதாந்த தேசிகரும் ஸ்ரீ ஸ்துதி ஸ்லோகம் ஆறில் திருமால் திருமகள் இருவரும் ஒருவராய் இணைந்து நிற்கின்றனர் என்றும், எனவே தனது ஆத்மார்ப்பணம் அவர்க்கே என்றும் கூறுகிறார்,

இத்தகைய பெருமை மிக்க 'ஸ்ரீ ஸ்துதியை' ஸ்ரீ ரங்கத்தில் பாடினார் ஸ்ரீ வேதாந்த தேசிகர்,

ஒரு பிரம்மச்சாரி தன் திருமண நிமித்தம் பொருள் வேண்டி நின்றார், அவருக்கருளவே திருமகளை நினைத்து இத் துதியைப் பாடி கனக மழை பொழியச் செய்தார்.

அத்தகைய சிறப்பு மிக்க ஸ்ரீ ஸ்துதியை யொட்டி எழுதப் பட்டதே 'திருமகள் துதி' - மொழி பெயர்ப் பென்பதால் அத் தனை சிறப்பாகக் கவிதை அமையாதிருக்கலாம், என்றாலும் கருத்து அப்படியே சிறிதும் மாறுபாடின்றி எடுத்தாளப் பட்டுள்ளது,

திருவேங்கட முடையானாற்றுப் படையுடன், ஒரு தாயார் துதி சேர்க்க வேண்டும் என்று எண்ணினேன். எனவே தேசிகரின் 'ஸ்ரீ ஸ்துதி' துணை கொண்டு அது நிறைவு பெற்றதாயிற்று இது 'திருமகள் துதி' முதற் பகுதியாம்

இத்துதியில் காணப்படும் சிறப்புகள் அனைத்தும் எனது ஆச்சாரியப் பெருமகனார் ஸ்ரீ வேதாந்த தேசிகரையே சாரும்,

குற்றம் காண்போர் அதனைப் பொருட்படுத்தாது அடியேனை மன்னித்து இந்நாலை ஏற்கும் படி தாளும், தடக்கையும் கூப்பித் தெண்டன் சமர்ப்பிக்கின்றேன்,

# ஸ்ரீ வேதாந்த தேசிகர் (அருளிய)
# ஸ்ரீஸ்துதி என்னும் திருமகள் துதி

-: நூல் :-

திருவெனும் பெயரொடு தரணிப் புகழெலாம் பெற்ற திருவே
திருவுடை யனைத்திற் குமுயிரே, திருமால் மார்பி னொளியே,
திருவுடை பக்தர்க் கிகபர சுகமெலா மளிக்கும் சுகமே,
திருவெனுஞ் சொல்லுக் கணியே, திருவே, உனைச்
சரணடைந்தேன். 1

எவரது தோற்றம் பாற்கடல், யாகசாலை என்னு மிடங்களோ,
எவரது வாழிடம் திருமால் மார்போ, தாமரைத் தடாகமோ,
எவரது மகிமை யுலகில் பரமப தமாய்அள வற்றதோ,
அவரது பெருமை யறிந்து அவரடி பற்றுவர் அடியார், 2

மக்களுந் தேவரும் துதிசெய் தேவி உந்தன் பெருமை,
சிக்கலின் றியெவரு முனையே நினைக்க அருள்வ தல்லவோ,
எக்கண மும்நான் துதிசெய் துனைப்புகழ் பெற்றவ னன்றோ!
எக்கண மும்நின் திருவடித் தொண்டுக் காசை யிலார்யார்? 3

எவரால் பிறப்பிறப் புமிலா வாழ்வும் பெற்றிடும் சராசரம்?
எவரவர் யோகிகட் கருளும் முழுமுத லொளியாய்த் திகழ்பவர்?
எவரவர் உன்திரு வடிமரு தாணிக் குழம்பு பெற்றவர்?
எவரவர்? திருமா லன்றோ? உன்புகழ் சொல்லத் தரமோ? 4

திருமால் திருமக ளெனுமிணை பிரியா இருவருக் கன்றோ,
உருவில் பெரிய சேடன், அன்பருளம் வேதாந் தங்கள்.
இருக்கை களாயின; அன்புடைப் பிணைப்பும், நற்குண நலனும்,
ஒருமன தாகிய இருவரும் ஒருவரை யொருவர் நிகர்ப்பரே? 5

திருமால் திருமக ளிருவரு மொருவரா யிணையா யுள்ளதால்
அருமை பானஎன் ஆத்மாப் பணமவர்க் கன்றி யார்க்கே?

பெருமை மிக்க மகிமை யுடைய மங்கல தேவியே,
அருமை. வேதங் களுமறி யவியலா வைஷ்ணவி யுனக்கே. 6

பாற்கடல் பள்ளி கொண்டான் தன்னரும் பதும லோசனி,
நாற்புறம் நான்மறை, நித்திய சூரிகள் பார்த்து நின்றிட,
ஆர்வமொ டாடிடும் முக்குணப் பலகை சொக்கட் டானில்
பார்தனி லரனயன் காய்களாய் இடமும், வலமும் அலைகிருர். 7

உலக நாயகி, உத்தம நாரா யணனெடு கிலைத்த,
தலைவி, லக்ஷ்மி, பத்மா, இந்திரா, சுந்தரி யென்றிடும்,
பலப்பல நாமம் பக்தியொ டோதுவார் பாவபுண்ணியமெனும்
அலைகடல் காற்றில் பிறப்பிறப் புக்கள் பெற்றலைந் திடுவரோ? 8

திருமகள் பரதே வதையெனப் புகழ்ந்துரைப் பாரொரு சாரார்
திருமால் பரம்பொருள் என்பா ருமுளர்; மற்றென் றறியோம்;
உருவெலா மவரே என்று பலவிதம் கூறுவ தென்னே?
இருக்கு முதலாம் மறைகள் காட்டிடும் தெய்வம் நீயே. 9

அடியார் தந்துயர் துடைக்க அரிக்கொரு தருமபத் தினியாய்,
நெடியோன் பலவித அவதாரங் கொள்ளும் போதெல் லாம்நீ,
வடிவம் பலவாய் பதியின் செயலுக் கிணைந்து நின்றிட,
குடிப்பிறப் புயர்ந்து கணவன் காரியங் களுக்கெலா மருள்
வாய். 10

மகிழ்ச்சிக் கடலதில் உறுதிகொள் வேக அலைகளி னழகை,
அகிலந் தனிலவ தாரங் கள்பெற் றுயர்ந்து நின்றிட,
அகலத் தங்கத் திருமார் புபாரம் வளைந்து கொடுக்க.
சகலமு மழகைப் பெற்றிடும் மரகதப் பச்சை வண்ணனில். 11

பாக்கிய லக்ஷ்மி பார்முழு வதும்பர வியுள்ள மொழிகள்,
ஆக்கிய வள்நீ, பார்தனில் பரமசி வனும்மதன் கணையால்,
தாக்குண் டடிமை யானதுன் புருவ வில்லெனும் கணையால்,
ஆக்கம் வேண்டி இந்திரன் தொழுதிட அருளினுய் நீயே. 12

அமுதப் பெருங்கொடு பாற்கடல் தன்னில் அவதரித் ததாயே,
அமுதத் தாமரை யெனுமோர் ஆசனத் திருப்பவள் நீயே,

அமுத மேகங் கள்மல ராயிரங் கொண்டர்ச் சித்தன,
அமுத நீரால் ஆனைக ளேட்டும் அன்புநீ ராட்டின. 13

உடன்பிறந் தாயமு தொடுலகி, லுவப்பொடு மாலும் ஏற்ருர்.
உடனுனைத் தன்மார் பதனில்; உவப்பிலா தேவரும் மகிழ்ந்தார்;
உடன்தொடப் பட்டபு வனமெலாம் நிலையாய்ப் பெற்ருர்,
களித்தார்,
உடன்செல். வங்களு மடைந்தார்; வாழ்ந்தார் உவகை யொ
டென்றும். 14

எளியோர்க் களித்து வாழ்வித் தலெனும் விரதம் பூண்டே
அளிசெய் யமுத மேகமாய், அன்றலர் தாமரை மலராய்,
அளிக்கவே உனதருங் கடைக்கண் நோக்குந் திசைகளி
லெல்லாம்,
அளிக்கவே செல்வ மனைத்தும் முந்திக் கொண்டோ
டுமன்ருே! 5

ஞானம், பக்தி, யோகம், செய்திடு மடியா ரெவரும்,
ஞான வழியொடு வேத வழியில் கருமங் களாற்றிட
மோன மொடுநிதி வேண்டின் வான்,கடல், புவி,குபே ரபுரி,
ஏனைய நிதியும் மழையெனப் பொழிந்து பெருக் கெடுத்
தோடிடும், 16

வேதங் களுக்குத் தலையணி யாம்நின் திருவடி யிணைகள்,
ஓதநீர் தன்னில் ஒருமலர் கமலத் துறையும் கனகமே,
ஓதியே யுள்ளம் களித்து நிற்பார், குடைநிழல், சாமரம்,
வேதம் புகழ்கேள் செவியின் பமாரம் சகலமும் பெறுவர். 17

நாடுவர் உனையே நாரணி நல்வாழ் வடைந்திட நல்லோர்,
நாடுவர் காமக் குரோதப் பல்வகைப் பாவங்க ளோடிட,
நாடுவர் மாயை நீங்கி மனமகிழ் வெய்திட உலகில்
நாடுவர் பிரமன் முதலாய் சகல உயிர்களும் தாயே. 18

தாயே சகிபதி களாகிய உங்கட் கரிய தொண் டாற்றிட
மாயை சூழுல கச்செல் வமெலா மழிவது கண்டு

சாயை போன்ற அவற்றை விலக்கிட அடியவ ரெல்லாம்
தாயே மறைவழி யிலவர் காரிய மாற்றுவ ருலகில். 19

எத்திரு வடிவணங் கிநிற்பின் இவ்வுடற் சுமையது நீங்குமோ,
எத்திருப் பதமது வீட்டினை நல்குமோ அத்திரு வடியினை,
எத்திக் கிலுமுறை தேவமா தர்களும் பற்றி நிற்பரோ,
அத்திரு வடியினை யானும் சிரமிசைத் தாங்கி நின்றேன், 20

முவ்வகைத் தாபமாம் வெய்பத் தால் வதங் கிநிற்கு மெனக்கு
எவ்வகைச் சிறந்த கருணை தருவது னதருட் பார்வை,
அவ்வகைப் பார்வை, அன்பு நிறைந்த அமுத மானது,
கவ்வமில் கவர்ச்சிப் பார்வை யதனுல் குளிர்ச் செய்வாய். 21

எம்பெரு மானிடம் கொண்ட பக்தியே, துயரங் களெல்லாம்,
வம்புடை இல்லற இருளெலாம் போக்கும் கதிரோனுகிவிட,
வம்பிலா வாழ்வளிக் குமுன்கரு ணையே மங்கல மளிப்பதால்,
தெம்புட னுனைநான் வேண்டிக் கேட்ப தொன்று முளதோ? 22

உற்ற தாய்நீ தேவி, உலகில் தந்தை விஷ்ணு,
உற்ற எனக்கோ ராசான், பெற்றோர் உங்கள் தொண்டு
பெற்று தாழ்ந்திட வழிகாட் டிநின்ருர், வேண்டுவ தென்னே?
சற்றே கூறெனக் கேட்பது போலுமுன் புன்னகை கண்டேன். 23

மங்களம் கூறிடும் மறைகள் சூடிடும் மந்தார மலேயே,
மங்கள மனைத்தும் உறைவிடமே, மாபெருங் கருணைக்கெல்லையே,
எங்களுக் காகமது கைடபர் அழித்தார் பெற்ற திருவே,
தங்குநீ யென்னுள் என்றும், உன்னடி போற்றி நின்றேன் 24

வாச மலருறை வாசவி, வேங்கட நாத னருளால்,
பாச மொடுலகில் பக்தர் மங்களம பெற்று வாழ்ந்திட
ஆசை யொடருளும் திருமகள் துதியினைப் படிக்கும் யாவரும்
கர்சி னியில்கலி நீங்கி மாசிலா வாழ்வது பெறுவரே, 25

# ஸ்ரீ ஸ்துதி எனும் 'திருமகள் துதி'

## குறிப்புரை

1 திரு-மகள்; தரணி-உலகம்; சொல்லுக்கணி திரு சொல்லுக்கே அணியாகத் திகழ்பவள்

2 திருமகள் பிறப்பிடங்கள் பாற்கடல், யாகசாலை; இருப்பிடம்- திருமால் மார்பு, தாமரைக்குளம்.

3 அவள் திருவடித் தொண்டுக்கு யாவரும் ஆசைப்படுகிறார்

4 சராசரம்-அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் அனைத்தும்,

5 திருமாலும், திருமகளும் ஒருவருக்கு ஒருவர் நிகராவார். அவர்கள் இணைபிரியாதவர்கள். அவர்கள் இருக்குமிடங்கள்- ஆதிசேடன், வேதாந்தங்கள், அன்பருள்ளம் என்பனவாம்.

6 வைஷ்ணவி-விஷ்ணுவின் மனைவி

7 பதுமலோசனி-தாமரை போன்ற கண்கள் உடையவள். அரன், அயன்களை ஆட்டுவிப்பவர் திருமகளும் திருமாலும் என்றவாறு.

8 பாவ புண்ணியங்கள் அலைகடல் காற்றுயின, உலக நாயகி முழுமுதற் கடவுள்.

9 எல்லாக் கடவுளர்களிலும் சிறந்தவள் திருமகள்.

10 தருமபத்தினி-எனவேதான் திருமாலுடன் அவர் எடுக்கும் அவதாரங்களிலெல்லாம் தானும் பிறந்து மனைவியாகிறாள் மற்றும் அவளின்றித் திருமாலால் தனித்து இயங்க இயலாதெனத் தொக்கி நிற்கின்றது.

11 பச்சை வண்ணன் திருமாலின் அழகுக்குக் காரணமே இலக்குமி.

12 கலைமகள், மலைமகள், அலைமகள் எல்லாம் திருமகளே

13 அமுதத்துடன் பிறந்தவள், மேகங்கள் மழை நீராலும் மலர்களாலும் அர்ச்சித்தன அஷ்டதிக்கங்கள் தீர்த்தங்களாலும் நீராட்டின.

14 திருமகள் தொட்ட புவளமெல்லாம் துலங்கின. இந்திராதி தேவர்களும் இழந்ததெல்லாம் பெற்று மகிழ்ந்தனர்

15 திருமகள் கொண்ட விரதம் எளியோர்க்குத் தண்ணளி செய்து வாழ்வித்தல் என்பதாம் "அவள் கடைக்கண் நோக்கிட செல்வங்கள் எல்லாம் போட்டிப் போட்டுக் கொண்டு ஓடி வருகின்றன"

16 அடியார்கட்குதவிட வான், கடல், புவி, குபேரபுரி முதலியவற்றில் உள்ள நிதியனைத்தும் பெருக்கெடுத்து மழையெனப் பொழியும்; கருமங்கள்-மறைவழிச் செயல்கள்

17 திருமகளின் திருவடி இணைகள் வேதங்கட்குத் தலையணி ஆயின, எனவே அவற்றை ஓதி திருமகளை வழிபடுவார் குடை, நிழல், சாமரம் முதலிய பலவும் பெறுவர்.

18 பாவங்கள் நீங்கி, மனமகிழ்ச்சி யெய்தி, நல்வாழ்வு பெற விரும்புவர் நாரணியை (இலக்குமி) நாடுவர்

19 மாயா உலகில் செல்வங்கள் சாயை போன்றவை, சாயை நிழல் எவ்வே அடியவர் உன் தொண்டான காரியத்தையே செய்வர்

20 திருமகள் திருவடி மறுபிறப்பொழிக்கும், வீடு பேறு நல்கும், எனவே தேவர்கள பற்றி நின்றார்; நானும் பற்றி நின்றேன்

21 முவ்வகைத் தாபம் நீக்கித் திருமகள் குளிர்ச்சி அளிப்பாள்

22 அவன் கருணை சர்வரங்களும் அருள்வதால் வேறொன்றையும் கேட்க வேண்டுவதில்லை.

23 தாய், தந்தை, ஆசான், எல்லாம் அவளாயிருக்க வெறென்ன வேண்டும்?

24 'தங்கு நீ என்னுள் என்றும், உன்னடி போற்றி நின்றேன்' என்று சரணாகதி அடைதல் கூறப்பட்டது,

25 இத்திருமகள் துதியினைப் படிப்பவர் கலி நீங்கி, மாசிலா வாழ்வு பெறுவர் என நூற்பயன் கூறப்பட்டது.

# திருமகள் துதி

## (இரண்டாம் பகுதி)

ஆதி சங்கரர் பல அரிய நூல்களை வட மொழியில் யாத்து அருளினர். அவா எழுதிய நூல்களில் திருமகள் துதி யாகிய 'கனகதாரா ஸ்தோத்திரம்' என்பதும் ஒன்று.

ஆதிசங்கரர் இளமையில் துறவறம் பூண்டு உபாதானம் (யாசகம்) பெற்று உணவு உட்கொண்டு வந்தார். ஒரு நாள் சோமதேவர் என்ற அந்தணர் வீட்டின் முன் சென்று 'பவதி பிக்ஷாந் தேஹி' என்று குரல் கொடுத்தார்,

சோமதேவர் குடும்பம் வறுமையில் வாடிக்கொண்டிருந்தது, சோமதேவரும் உபாதானம் பெற வெளியே சென்றிருந்தார். சங்கரரின் குரல் கேட்டு இல்லத்தரசியான குணவதி, சோமதேவர் மனைவி குணசீலை எட்டிப் பார்த்தாள், வறுமையிலும் செம்மையாக வாழும் குடும்பம் அது

ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந்நாளும்
ஊற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராயினும்
இல்லை யென மாட்டா ரிசைந்து'

என்றாற் போல அந்த அம்மையார் மனம் குரல்கொடுத்தவர்க்கு இல்லை எனக் கூற முடியாமல் தவித்தது,

அவ்வம்மையார் வெளிப்போந்து, ஆங்கு நின்றுகொண்டிருந்த மோகன சொரூபத்தை நோக்கினர். இறைவன் சங்கரனே நிற்பது போல் தோன்றிற்று, ஐயோ கணவர் வரவில்லையே, அவர் வந்துவிட்டால் அவர் கொண்டு வரும் உணவைக் கொடுத்துவிடலாமே என எண்ணினள்

பின்னர் தெளிவுற்று வேறுவழி அறியாது ஆதிசங்கரரின் திருவடிகளில் வீழ்ந்து தான் கொடிய பாவி என்றும், அழ

தளிக்க வழியின்றி அல்லல்படுவதை உணர்த்தி தனனே மன்னித் தருள வேண்டி நின்ருள்.

பிரம்மச்சாரியாரான சங்கரரின் அருள் மனம் அது கண்டு நெகிழ்ந்தது. அவர் உடனே அன்னமில்லா விடினும் அன்னத்திற்குத் துணைப் பொருளாக ஏதேனும் இருப்பினும் போதும் என, தருமசீலை இல்லத்துள் விரைந்து சென்ருள். ஒரு பழம் பாத்திரத்தில் ஒரு நெல்லிக்காய் ஊறுகாய் இருப்பதைக் கண்டார், பெரு நிதியம் பெற்ருற் போல் மனமகிழ்ச்சி அடைந்தாள் உடனே அந்த நெல்லிக்காய் ஊறுகாயைப் பிக்ஷை பாத்திரத்தில் இட்டு வணங்கினுள்.

இதுகண்டு கருணை உள்ளம் கொண்ட சங்கரர் அவ்வம்மையாரின் அருள் மனத்தையும், வறுமை நிலையையும் கண்டு செல்வங்களுக் கெல்லாம் செல்வியான, திருநிறைச் செல்வி திருமகள் மீது துதிப் பாடல்கள் பாடினுர் அக்குடும்பம் வளம் பெற அருளுமாறு துதி செய்தார். அதுவே 'கனகதாரா ஸ்தோத்திரம்' ஆயிற்று.

திருமகளும் ஆதிசங்கரரின் குரல் கேட்டு, மகிழ்ந்து அபயமளித்து சோமதேவரின் இல்லத்தில் பொன்மய நெல்லிக்கனிகளைக் கனகமழையாகப் பொழிவித்து அவர்கள் வறுமையைப் போக்கினுள்,

எனவே அத்தகைய ஆதிசங்கரரின் அருட்பாக்களைத் தழுவி தமிழாக்கம் செய்து 'திருமகள் துதி' இரண்டாம் பாகமென இணைக்கப்பட்டது.

# ஸ்ரீ ஆதிசங்கரர் வடமொழியில் அருளிய 'கனகதாரா ஸ்தோத்திரம்' தழுவிய 'திருமகள் துதி'

(தமிழாக்கம். 'பிரகிருதி' சி. நர். கிருஷ்ணமூர்த்தி. எம்.ஏ;பி.டி

திருமகள் கொண்டதால்,திருமார் பொளிர்ந்து,மனமும்,
நிறைந்து
திருமகள் மார்பன் மகிழ்ந்தான், திருவொடு காட்சிதந்தான்;
திருமகள் கடைக்கண் நோக்கின் திருவுக்குக் குறைவுமுண்டோ?
திருமகள் உனையேநான் துதித்தேன் திருவினை எனக்கருள்
செய்வாய் 1

திருமகள் கண்கள் சுழலும் திருமால் முகமலர் கண்டே,
திருமகள் கண்கள் அகலும் திருவுடை நாணம் கொண்டே,
திருமகள் கண்கள் சுழன்றும், அகன்றும் செயலாற் றுமெனின்
திருமகள் கடைக்கண் நோக்கினை யான் பெறின் திருவெலாம்
பெறேனோ; 2

இந்திர பதவியும் அளிக்கும் இலக்குமி கடைக்கண் நோக்கது,
மந்திர மலரடி மாதவன் மகிழ்ச்சியு மவளால் அன்றோ,
மந்திரக் குவளை மலரென எழிலுடை மாதவன் கண்கள்,
இந்திர பதவியும் வேண்டேன், இகந்தனில் பொருள்தனை
அருள்வாய், 3

மூடியும் திறந்தும் முகுந்தன் எழிலினைப் பருகும் கண்கள்,
ஆடியில் அழகினைக் கண்டான் ஆதிமூலன் மகிழ்ந்து நின்றான்,
தேடியே தேவனின் மார்பினை இருப்பிடம் கொண்டசெல்வி,
தேடினேன் உனையே கண்மலர் நோக்கின் செல்வம் பெறுவேன்.
4

மணிமாலை கொண்ட மணிவண்ணன் மார்பில் தங்கிய தாயே
மணிநிறம் கொண்ட நின்விழிகள் மங்கள மனைத்தும் நல்கும்,
மணிமொழி பார்வை மாலுக்கு மாலினை அளித்து நின்றது,
அணியெனு முனதருள் கொண்டுநான் மங்களம் பெற்றிட
வேண்டும், 5

கொடியவரைக் கொன்ற கண்ணன் கருநிற மேகத்தை ஒத்தான்
இடியோடுவருமொரு ஒளியெனத் திருமகள் ஆங்கே
ஒளிர்ந்தாள்,
அடியவன் போற்றிட தேவியும் ஒளிர்வாள் மாலவன் மார்பில்
அடிபற்றி நிற்கும் எனக்கு அனைத்துச் செல்வம் அருள்வாள் 6

மங்களா சாசனம் பெற்றாள், மாதவன் மங்களம் பெற்றான்,
மங்கள நாயகி அருளால் மதனும் மாதவன் வென்றான்,
மங்கள மாதவி கடைக்கண் மங்களத் துக்கிணை யுமுண்டோ?
மங்கள மாதின் பார்வை மண்ணில் கணமும் போதுமே. 7

கருமேகம் காற்று வீசிட கனமழை நாளும் பொழியும்,
அருள்விழி அடியார் உளமகிழ அருள்மழை நாளும் பொழியும்,
திருவிழி மழைபெற தீவினை யனைத்தும் ஒடி ஒளியும்,
திருமால் உயிரே எனக்குத் திருவும், வளமும் அருள்வாய். 8

ஒருமகள் பெற்றார் உலகில் திருவினைப் பெறவே உழல்வார்,
திருமகள் திருவடி எனுமொரு பெரும்பதம் பெறுதல் எளிதோ?
திருமகள் நோக்கின் பதமலர் தன்னொடு பதவியும் பெறலாம்,
திருமால் மனமகிழ் தேவிநின் திருவருள் சகலமும் அருளுமே 9

கருட வாகினி, கமலத் துறைவாய் கருடக் கொடியொடு
அருளொடு மக்களை ஆக்கிக், காத்து, அழிப்பவள் நீயன்றோ!
பொருளொடுபுகழெலாம் புவிதனில் பெற்ற சுந்தரி, நீயன்றோ!
அருளுடை அரிமகிழ் அந்தரி, திரிசூலி, திருவே, அருள்வாய். 10

மறைபொருள் நீயே மற்றுநற் செயல்கள் நீயே, மாதவி
மறைவிலா அழகிநீ, மக்கட் பண்பிற் கணிநீ, மாதேவி
மறைபுகழ் சக்திநீ, மாமலர், தேவிநீ, நிறைவுடை நீவிநீ
மறைகாத் தளித்தான் மார்பினி லுறையும் மாதாநீ
அருள்வாய். 11

வணக்கம் தாயே, வண்ண மாமலர், முகத்து மதியே,
வணக்கம் வையந் தன்னில் அமுதிரண் டையும் பெற்ருயே,
வணக்கம் வண்ண மேனியான் விஷ்ணுவி னுள்ளம் கவர்ந்தாளே
வணக்கம் உனக்கே, வாழ்வொடு செல்வம் பெற்றிட
அருள்வாய். 12

வணக்கம் கரந்தனில், பொற்கம லமேந்திய கமலா சனியே,
வணக்கம் உலக மனைத்தும் ஆண்டருள் அற்புத நாயகி,
வணக்கம் முப்பத்து முக்கோடி தேவரெலாம் போற்றும் நாயகி
வணக்கம் சாரங்க பாணியின் மார்பகம் நீங்கா நாயகி. 13

வணக்கம் பிருகு வமிசம் தழைக்க வந்த திருவே,
வணக்கம் திருமால் காக்கும் தொழிலுக்குற்ற துணையே,
வணக்கம் இலக்குமி வண்ணத் தாமரை அமர்ந்த தேவி
வணக்கம் தாமோ தரனின் தடமார் பினிலமர்ந் தவளே. 14

வணக்கம் ஒளியுள்ள ஒளியே, கமலக் கண்ணி, மகத்தாளே
வணக்கம் புவன மனைத்து மியங்க உதவும் தாயே,
வணக்கம் வானமும், வையமும் மகிழ்ந்து போற்றும் தேவி
வணக்கம் வைய மளந்த பிரான்தன் அன்பின் ஒளியே 15

செல்வ மனைத்தும் அளிக்கும் செல்வி, புலன்க ளனைத்தும்
செல்வம் பெற்றிட சாம்ராஜ்யபதவி அளித்துக் காப்பாய்,
செல்வம் குறைவிலா தளிசெய் துவிடும் கமலக் கண்ணி,
செல்வி காப்பாய், சகந்தனி லெனைநீ சர்வமும் அளித்தே. 16

மாதவன் மனமகிழ் மங்கல நாயகி மலரினி லிருப்பவளே
வேதனை நீங்கியே வரமது பெற்றிட தியானம் செய்திடும்

சாதனை மானிடர் தமக்குச் சகல சம்பத்து மளிப்பவளே
வேதனை நீங்கிட திரிகரண சுத்தியாய் துதித்தேன்,
அருள்வாயே. 17

பங்கய மலரில் இருந்து பங்கயம் கரந்தனில் கொண்டாய்,
எங்கணும் தூயநல் லாடையும்,வெண்ணிற மாலையு மணிந்தாய்
தங்கும் அறிவனைத் துமிங்கு கொண்டாய், அரியினை மணந்தாய்
தங்கும் உலகில் உயிர்கட் கெல்லாம் செல்வம் அளிப்பாயே 18

எண்டிசை கஜங்கள் தீர்த்தம் ஏந்தி வந்துனை நீராட்டி
வண்டிசை பாடிடும் மலர்கள் கொண்டு பூசனை புரிந்தன,
எண்டிசை ஒளிபெற தூய்மை பெற்ருய், துலங்கி நின்ருய்,
எண்டிசை காக்கும் இறைவன் நாயகி, பாற்கடல் பிறந்தாய். 19

தாமரை உறையும் தயாநிதி, தாமரைக் கண்ணன் தேவி
மாமறை அறியேன், வறியேன், அடைக்கலம் புகுந்தேன் பாவி
மாமறை புகழும் மங்கல நாயகி, கருணைக் கடலே
தாமரைக் கண்ணால் அடியேன் செல்வம் பெற்றிட அருளே 20

உலகம் ஈன்ருய், உத்தமர் மனதில் உயர்வொடு நின்ருய்,
உலகம் தன்னில் இத்துதி கொண்டு பரவிடும் உத்தமர்,
அலகிலா உன்னுடை அருளது பெறுவர், செல்வமும் பெறுவர்,
உலகில் நன்மை பெறுவர், அறிவொடு புகழ்வார் உனையே 21

(மொழி பெயர்த்தோன் வாழ்த்து,)

முத்தொழில் புரிந்திடும் மோகன வல்லியை, முராரிதேவியை
எத்தொழில் புரிவார், யாவரே ஆயினும் இதய சுத்தியாய்
வித்தமும் சங்கரன் அருளிய நிர்மல துதிதனைப் பாடுவோர்
சித்தமது தெளிந்து சீரும் சிறப்பும் பெற்றுமே வாழ்வரே. 22

# கனகதாரா ஸ்தோத்திரம் என்னும் திருமகள் துதி

குறிப்புரை

1 திருவினை அருளத் திருமகளை வேண்டுதல், திருமாலின் மகிழ்ச்சிக்கும், அருளுக்கும் காரணம் திருமகளே என்றவாறு.

2 திருமகள் கண்கள் திருமாலைக் கண்டும், காணுமலும் அனுபவிக்கின்றன. அத்தகைய கண்களின் கடைக்கண் பார்வை எல்லாச் செல்வத்தைவும் அளிக்கும்.

3 இந்திரபதவியும் நல்கும் அவள் பார்வை: எனினும் அப்பதவிவேண்டேன் என்கிருர்.

4 திருமகள் திருமால் மார்பினைத் தேடி அடைந்தாள் அவள் தன் கண்மலர் நோக்கு வேண்டப்படுகிறது.

5 அவளருள் என்னும் அணிகொண்டு தான் மங்கலம் பெற வேண்டும் எனவேண்டப்படுகிறது.

6 திருமால் மேகமாயும், திருமகள் அதில் மின்னலாயும் இருக்கிருள். அப்படிப்பட்ட திருமால் ஒளி செல்வம் அருளும்.

7 அவள் கடைக்கண் பார்வை கணநேரம் பட்டாலே போதும், அப்பார்வையின் உதவியாலன்ருே மன்மதன் விஷ்ணுவை வென்ருன்.

8 திருமகளின் திருவிழி மழை தீவினை ஒழிக்கும்

9 உலகினர் பொருள் பெற உழல்கின்றனர். ஆனல் திருமகள் பதமும், அருளும் பெற்ருல் யாவும் பெறலாம்.

10 அவருடைய வாகனம், கொடி, மற்றும் அவளுடைய பல பெயர்கள் கொண்டு துதி செய்யப்படுகிருள்.

11 மறைபொருள், சக்தி, கலைமகள், அலைமகள் எல்லாம் அவளேயாம்,

12 இதுமுதல் 4 பாடல்கள் திருமகளுக்கு வணக்கம் என்று ஒவ்வோர் அடியிலும் அவள் புகழ் பாடி வணக்கம் செலுத்துவதாகும். அமுதம், சந்திரன் இரண்டுடனும் பிறந்தாள்-எனவே அவற்றைப் பெற்ருள்.

13 கமலாசனி, பொற்கமலக் கரம் உடையாள், உலக நாயகி தேவர்கள் போற்றும் உத்தமி, சாரங்கபாணி மார்பில் உறைபவள்

14 பிருகுவமிசத்தினள், திருமாலுக்குற்ற துணைவி,

15 ஒளியுடையாள், கமலக்கண், கமலமுகம் பெற்றவள், உலகத்தை இயக்குபவள், வையமளந்த விஷ்ணுவின் ஒளி.

16 புலன்கள் நல்வாழ்வு பெற்றிட சாம்ராஜ்ய பதவி அளிப்பவள் சர்வமும் அளிப்பாள்

17 திரிகரண சுத்தியாய் துதித்தேன், சகல சம்பத்தும் அருள்வாய்,

18 தூயநல்லாடை, வெண்ணிற மாலை கொண்ட கமலாசனி, அறிவின் தலைவி, உயிர்கட்குச் செல்வம் அளிப்பாள்

19 அஷ்டதிக்கஜங்கள் எண்டிசை நீர்த்தம் கொண்டுவந்து நீராட்டி அர்ச்சனை செய்தன, எனவே பாற்கடல் பிறந்த தயநாயகி மேலும் துலங்கி நின்றுள்.

20 அடைக்கலம் புகுதல்-அதாவது சரணுகதி அடைந்து செல்வம் பெற்றிட அவள் அருள் வேண்டுதல்

21 உலகம் ஈன்ற திருமகளை இத் துதி கொண்டு பரவுவார் எல்லா நன்மையும் பெறுவர்

22 வாழ்த்து :- முத்தொழில் புரியும் இறைவியாம் திருமகளை, ஸ்ரீ சங்கரர் அருளிய 'கனகதாரா ஸ்தோத்திரம்' என்னும் இத்திருமகள் துதிதனைப்பாடுவார் சீரும், சிறப்பும் பெற்று வாழ்வர் என்று 21, 22, பாடல்கள் நூற்பயன் எடுத்துரைக்கின்றன.

# பாரதியார் பாடிய திருமகள் துதி

பாரதியார் திருமகளைப் பாடி, அவளை வணங்குங்கள் என்கிறார் ஏன்? "பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை"

என்ற வள்ளுவர் கூற்றின்படி பொருள் இன்றி வாழ முடியாது. அது மட்டுமல்ல; நல்லறம் நாடிச் செய்யவும் செல்வம் தேவைப்படுகிறது, எனவே'

செல்வத் திருமகளைத் - திடங் கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வ மெல்லாம் தருவாள் - நமதொளி
திக் கனைத்தும் பரவும்" எனவே பணியவேண்டும்.
"பொன்னிலும் மணிகளிலும் - நறும்
பூவிலுஞ் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியர் நகைப்பினிலும் செழுங்
காட்டிலும் பொழிலிலும், கழனியிலும்
முன்னிய துணிவினிலும் - மன்னர்
முகத்திலும் வாய்ந்திடும் திருமகளைப்
பன்னி நற் புகழ்பாடி - அவள்
பதமலர் வாழ்த்தி நற்பதம் பெறுவோம்" என்று

கூறுவதன் மூலம் அவள் வாழுமிடங்களை எல்லாம் காட்டுகிறா மற்றும் அத்தகைய திருமகள் கடாக்ஷம் பெற்றுவிட்டால்,

"செல்வமெட்டும் எய்தி - நின்னால்
செம்மை யேறி வாழ்வேன்,
இல்லையென்ற கொடுமை - உலகில்
இல்லையாக வைப்பேன்,
முல்லை போன்ற முறுவல் - காட்டி
மோக வாதை நீக்கி
எல்லையற்ற சுவையே - எனை நீ
என்றும் வாழவைப்பாய்" என்று பிரார்த்திக்கிறார்
எனவே நாமும் அச்செல்வியை நோக்கி,
தேவி, 'இல்லையென்ற கொடுமை - உலகில்
இல்லையாக வைப்பாய்' என்று உலகநன்மை குறித் வழிபடுவோமாக.

# பிழையும், திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 4 | நீடுடு | நீடுழி |
| 2 | 7 | காணும் | தாணும் |
| 3 | 19 | திருப்தி | திருவீதி |
| 7 | 69 | பரசர | பராசர |
| 14 | 266 | ஒளியடை | ஒளியுடை |
| 17 | 369 | கிறையுன | கிறையுடை |
| 19 | 416 | பரிவெடு | பரிவொடு |
| 21 | 464 | மரமபத | பரமபத |
| 22 | 15(5) | பைகேதம் | வைகுந்தம் |
| 25 | 33 | மரி | வரி |
| 26 | 399 | புரிந்தன | பூசனைபுரிந்தன |
| 27 | 48(2) | இறந்தவை | சிறந்தவை |
| 28 | 54 | கோதர்ப்ப | கோகர்ப்ப |
| | 56 | கிருஷ்ண | கிருஷ்ண தீர்த்தம் |
| 32 | 213(3) | முடிருவி | மூவுருவி |
| 43 | 7 | வெம்பத் | வெப்பத் |
| | 17 | தாழ்ந்திட | வாழ்ந்திட |
| 44 | 1 | திரு | திரு-திருமகள் |
| 54 | 14 | திருமாளுக்குத் | திருமாலுக்குத் |
| 55 | 19(?) | தயநாயகி | தாயநாயகி |